பாங்கரொங்கசணும் படர்சிறை களைந்துவண் டணைக
ளோங்கிவான்றொடு தருக்களை யொறிந்துமிக்குயர்ந்தோர்
வாங்கியோராறு வகைப்பகை துமித்தல்போன்மறித்துத்
தேங்குமன்பர்கள்சிந்தைபோற் சுசியுறத்திருத்தி. (௭௭

காப்புறப்புறங் கணைதிரள்காவிரி பவானி
நாப்பணுற்கட றழுவியதிகிரிமா நகம்போற்
சேப்புறுங்கதிர்த தினகரமண்டலந் தடவிப்
பார்ப்பதாமெனப் பரந்துசூழ் மூதெயில்பதித்தான். (௭௮)

உடுத்தமேகலை யாமெனவோரிரு மருங்கு
மடுத்தவாறகழ்ந்த யாறையின்கிடங்கரா னமைத்தான்
கடுத்ததும்பிய கருணையானருளினுற் பிறவி
தடுத்துமேவருங் கதிபுகும் வானவர் தச்சன். (௭௯)

ஆழிகைக்கொள்வோ னுறங்குபாற் கடலலையணிபோ
லேழிகற்பசும புரவிகாலிளைப்புற நிவந்த
சூழிகைக்குலப் பதியுஞ சுடர்விடு மாட
மாழிகைக்குல நிரைகளுந் தனித்தனிவகுத்தான். (௮௰)

சிகரமாமணி மேடையுந் தெற்றியுமாங்கர்ப்
பகரொணாவெழிற் சதுக்கமும் பரிந்தவெவ்வேறு
மிகலிலாதமைத் திலங்கையஞ் சருவனமெலாத்து
மகரதோரண வனமென மறுகெலாநிறைத்தான். (௮௧)

ஆதிநூலுவ லந்தணர்க்காலய மொருபா
னீதிநூலுணர் நிருபர்மந்திரங்களை யொருபாற்

ஸ்ரீதின்மாமதி யமைச்சர்க டிரண்டனையொருபாற்
கோதின்மாநிதி வசியர்தங்குழாத்திட மொருபால். (௮௨)

தடங்கொள் காவிரிக் கணியதாய்ச் சைவர்மாமுனிவர்
மடங்கள் வெள்ளைவில் செட்புறவகுத்துமற்றானோர்க்
கிடங்கள் வேறுறவே தகுதறவியற்றினை வேலை
விடங்கொள்கண்டனுக்கடிமைசால்மயனெனுமேலோன் (௮௩)

கொன்றைதாதகி குங்குமங் குருந்தயர்தார
மன்றன்மாதவி பாதிரி சண்பகமலகுளாங்
துன்றுசந்தனங் கூவிளங் கோங்கமசோக
நின்றநூதன வனம்பல சூழவுநிறைத்தான்.

கடவிழ்ந்தசெங் குமுதமீங் தீவரமெழிற்பூந்
தோடலர்ந்தபைங் குவளை யஞ்சுரும்புசூழ்கமலங்
காடலர்ந்தெண வலர்ந்தபூந் தடங்க ஞங்கபூநீ
ரோடையும்புற வணியதா யோங்குறவியற்றி. (௮௫)

உருத்தயங்கிய வுத்தர வீளைகைக்கு மேலாய்த்
திருத்திமற்றைய புறவணியுளவெலாந் தெய்வப்
புரத்தின்மேம்படு மாநகர்க்காக்கிவான் பொதுவி
னிருத்தனூர்க்குறை யாலயப்பணி நிருமித்தான். (௮௬)

துலங்குமாரணப் படிவமாமிலஞ்சைதயைச் சூழ்ந்து
வலங்கொள்வான்றட மணிமதிலணியுற வகுத்துக்
குலங்கொளாடகக் கொடுமுடிக் குன்றமேசிகர
மிலங்கவங்துநின் றேத்தல்போற் கோபுரமியற்றி. (௮௭)

பூதநாயகன் வானவர் நாயகன் புனித
வேதநாயகி நாயகன்வியப்புற விண்ணோர்
காதல்கூர்மணி மானசே கரசின கரங்க
ளாதிநான்முறை வேறுவே றழகுறவாற்றி. (௮௮)

மற்றுமுள்ளன பணியெலாம்வரன்முறை முன்னூல்
சொற்றவாறனாத் துணையினார் திறம்பிடா தியற்றிச்
சுற்றமூதெயி னகரினைச் சரோருகன் சுவணன்
றெற்றெனச்சிவ னருளினாற் பாவனஞ்செய்தான். (௮௯)

விருப்பினால்வகை வருணமுமார்நகர் விளங்க
கிரப்பிவேண்டுவ நிலைபெறுவளங்களு நிறுத்தித்
திருப்பொருந்திய தெக்கணவளகையாய்த் திருப்பே
ரிருப்பதாக்கின னந்நகர்க்கிருநிதிக் கிறையோன். (௯௦)

சிந்தைவாக்குமெய் யொன்றியதெளிவுளோன் சிறப்பால்
வந்துமாதவப் பராசரனடிமலர் வணங்கி
யந்தமாமுனி தன்னொடுமவன்பதித் தமைத்த
சந்தவாரமுத லிங்கத்தின் சந்நிதிசார்ந்து. (௯௧)

ஆவிபன்னவவ் வாரமுதலிங்கத்தின் கீழ்பால்
றேவதீர்த்தமொன் றுள்ளதத்தீர்த்தத்தின் விதியா
லோய்விலன்பினிற் குடைந்துபே ரொளிவிடுமமுத
பாவனப்படி விலிங்கபூசனை பரிந்தாற்றி. (௯௨)

அங்கணாயக னருள்பெரி தடைந்துமெய்வேத
மங்கைநாயகன் மகிழ்ந்துறை தெக்கணவளகைப்

புங்கமாககர்த் திருத்தெருவலஞ்செய்தப் புரிக்கண்
டங்குபூசுரர்க் கரும்பொருள் விருப்பறத்தந்து. (௬௩)

பணிகொள்வார்சடைப் பரனருள்விடைகொடு பரசன்
றுணைகொடாரொடெழு தந்தணராசிமேற் சூடி
மணிகொள்வான்முடி வச்சிரவணன் மலரலங்க
லணிகொள்புட்பகத் தமர்ந்தள காபுரியடைந்தான். (௬௪)

அலைத்தவெம்பவ மகற்றுவான் வேண்டினோரந்தத்
தலத்துவைகிட வேண்டுமென் றருட்சதுர்மறையா
லொலித்தகாதலான் யானுமக்குரைப்பனென் ஞங்கோர்
திலத்துணைப்பொழு துறையினும் பிறவிநோயகிதையும். (௬௫)

ஞானமிக்கவே றறிவுளீர்நறுங்கனி வதரி
கானமன்னது கடிகமழ்தெக்கண வளகை
யானதிவ்வண மென்றன்னருமறைக கொடிக
டானிவர்ந்திடத் தாங்கருட் டருவெவளஞ்சூதன். (௬௬)

இவையெடுத்தருண் முனிவரனியப்பிடக் கேட்ட
சவுனகாதிமா முனிவர்கடனடபிலா னந்த
வுவகைய்ங்கடல் குளித்தனர் களித்தனருணர்வுட்
வையுறுஞ்சிவ சிவவெனககண்கணீர் சொரிந்தார். (௬௭)

குபேரன்சிவார்ச்சனைச்சருக்கம்

முற்றிற்று.

ஆகச்சருக்கம்-௩-க்கு விருத்தம். (௧௭௦.)

திருச்சிற்றம்பலம்.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# நாலாவது

# பாராசரச்சருக்கம்.



கராசலவுரியனைக் கனகன் பூசித்து
விராசிதநகர்செய்த மேன்மையீதினித்
தராசெனநிலைபெறு சமாதிகைவரும்
பராசரனுங்குசெய் பணியியம்புவாம். (௧)

தன்னிகர்வேறிலாச் சவுனகாதியர்
பின்னரும்வினவுவார் பிறங்குகேண்மையோ
டன்னமெய்ப் பராசர னமுதலிங்கமப்
பொன்னகர்பதித்ததும் பூசைசெய்ததும். (௨)

உள்ளரும்புலவர்கட் குணவதாயுங்
தெள்ளமுதந்நகர் சேர்தம் மாமுனி
வள்ளல்பால் வந்ததும் வகுத்துரைத்தியென்
றுள்ளியோர் வினவலு முணர்த்துஞ்சூதனே. (௩)

அலையெறி பாற்கட லலறப்பண்டையிற்
றொலைவறுமசுரருஞ் சுரரும்வாசுகி
நிலைபெறு வடத்திற னிழல்செய்யாடக
மலையெனு மத்திடை மதனஞ்செய்யுநாள். (௪)

வருந்திமெய் யுணர்வொடும் வழிபட்டோர்க்கெதிர்
பரிந்தருட் சிவம்வெளிப் படுதல்போற்சுர
ரருந்துவான் றுறைகட லகடுவாயவிடச்
சுரந்துமே லெழுந்தது தூடவான்சுதை. (௫)

அமரியாங் குதித்திடு மெல்லையார்கலித்
தமரமுநகீழ்ப்படத் தயிததியாகயோ
ரிமையவர்தமகருமுன் பிணைந்துமுந்தின
ரமைடமாங் குணர்ந்துமா லணங்கினெய்தினன். (௬)

வந்தமோகினிதிரு வடிவச்செஞ்சுடர்
முங்கியவண்டுபோன மூசித்தானவர்
சிந்தைநைந்துருகி யிசைறியநுண்ணிடைப்
பைந்தொடிமக்கெனப் பலருமெண்ணினர். (௭)

தடம்புயத்தமரரைச் சயித்துத்தண்சுதைக்
கடங்களைக் கதிர்விடுங் கனகவாண்மணிக்
குடம்புரை முவிமுலைக் கொவ்வைவாயிவட்
கடங்கலு மளி[illegible]மென் றவசமாயினர். (௮)

அடுத்துள விண்ணவர்க் கருத்துவானருள்
மடுத்திடு நெஞ்சினன் வலிய னவ்வவர்
தடுப்பருங் காமநோய் தலைகொளத்தனி
தொடுத்தவாண் முறுவலான் சுதையைவெளவினன். (௯)

அஞ்சனவண்ணமா லணங்கு மோகினி
வஞ்சனைத் தொடர்பினல மயக்கிவானமர்க்

குஞ்சரவவுணர்கைக் கொடாதுவேறிடத்
தெஞ்சலில் சேமஞ்செய் திருத்திவைத்தபின். (௧0)

மாயையான் மருந்தினை மறைத்துநாள்சில
போயபின் னருளிறற் புலவர் மாதவ
ராய்வுறும் விஞ்சையர் பிதிரகண ரிருடியோர்க்
கோய்வற வேண்டுவ வுதவிபபின்னரும். (௧௧)

மற்றுளசுளதயினை மாயனோர்பசும்
பொற்றடங் குடத்திடை நிரப்பிபபோதவுந்
தற்றனக் கேற்பன கவர்ந்து தண்டுழாயக்
கொற்றவன் மீட்டுந்தன குறிப்புளெண்ணினான் (௧௨)

பரிந்தருந் தவம்பயில் பராசரனு யோ
ராருந்திடவமுதுவா னகிலத் தேற்றமே
தருந்தல விசேடமாயத தயாகுதீர்த்தங்கள்
பொருந்துநன் னலத்தவாய்ப் புகழினைமிக்கதாய். (௧௩)

அம்புவியுளதலத் தடைந்திவ் வாடகக்
கும்பவாரமுதினைக கொடுபராசர
னன்பனுக் களித்தியென் றியமபிமல்கினான்
வெம்பணிப் பகைவனும் விடைகொண்டேகினான். (௧௪)

பத்தியிற்சிரங்கொடு பவானிகாவிரி
மத்தியின்விளங்கிய வதரிவை பிடை
யத்தனையடிபணிந் தமுதகுமபத்தை
முத்திசேர்பராசர முனிக்குநல்கினான். (௧௫)

(வேறு.)

வாங்கினன் பவானிகூடல் வளளலார்த முள்ளரு
ளீங்கிருந்த வண்ணமென்கொ லென்றிரங்கி யன்பினாற்
பாங்கிருந்த வாணவப் பகைச்செருக் கறுத்தரு
ளோங்கரும் தவத்துளோ ருடன்கலந்துவப்புறா. (௧௬)

வடித்திடுந் தவப்பராசன் மாதவத்தின் வண்சுவைக்
கடத்தைநாடி யவுணர்வந்து கவர்வரென்று காணினுந்
தொடுத்தமால் வரைத்தலங்க டோறுமிருந் தருந்தவ
மடுத்தயோகர் பலரையங்கு வரவழைத் திருத்தினன். (௧௭)

தூயமாமுனிக்கணத் துடன்சுவைக் கடத்தையோர்
சாலையைவைத்து வந்துபன்ன சாலைவா யிருக்குநாள்
வாயிதத்தி லவுணரிந்த வஞ்சகஞ்செய் தெம்மையிம்
மாயைசெய்து வஊமேக வண்ணனென்று ளெண்ணினார்.()

வெங்கண்வா ளரிக்குழாம் வெகுண்டபோ லெழுந்தெரி
செங்கணார் படைக்கலங்கொள் செங்கையார்கள் சேனைபோ
டங்கண்வா னடைந்ததேவ ரஞ்சியோட வங்நக
ரெங்குநாடி யம்புவிக்க ணெண்ணிலார்கணண்ணினார். (௧௯)

வந்துகாம ரூபராய் வளைந்துமா திரந்தொறுஞ்
சந்திலாது யோக்கிடு சாதுரங்க சேனையோ
டுந்துகா விரிக்கரைக்க ணெண்ணரு வொழுக்கிடுங்
கொந்தலர்ப் பொழிற்பவானி கூடலெல்லை கூடினார். (௨௦)

கங்குலிற் கறுத்திடுங் கனத்தபார மெய்யினர்
பொங்கமோடு பந்தெனப் பொருப்பையேந்து கையினர்

செங்கணாரில் யோகர்மேற் சினந்தெழுந்து காந்தினார்
மங்குலைப் பிழிந்துநீர வாய்மடுத்து மாந்தினார். (௨௧)

இன்னவண்ண மனீகமோ டெழுந்ததான வர்க்கெலா
மன்னர்காவ லிலவணா சுரன்வரத்தின் வந்துளார்
வன்னியன்ன தண்டகன் மறங்கொள்வீரன் வஞ்சகன்
றன்னுவென்றி வசகிரா சுரன்சுரர்க் கடந்துளார். (௨௨)

(வேறு.)

கரித்திரளிரதங் கடும்பரியரக்கர் கலந்தநாற்படையினை
நான்காய்ப்
பிரித்தனர் தண்ட காசுரனென்னும் பெற்றியோன்
கொற்றவாட்படைக
டரித்தபோரவுண ரோரொண்ணாயிரவர் தம்மொடும்
விசயமாநகர்க்கு
மருத்துறுதென்பால் மாதவன்மகிழ்ந்த மங்கலகிரிப்புறத்
திழிந்தான். (௨௩)

காரெனக்கவித்த படையினான்வெய்ய கடுங்கண்வீ
ராசுரனென்பா
னீரையாயிரவ ரொறுள்வலித்தடக்கை
யெஃகவேற் றயித்தியரொடுமவ்
வீரமாநகர்க்கு மேற்றிசையெல்லை யிடைத்தனன்
வஞ்சகனென்னுஞ்
சூரனுங்கிருமூவாயிரவவுணர் தம்மொடுங்குணதிசை
தொக்கான். (௨௪)

உக்கிரமுகத்தோ டுதிசதத்தானவரோன்பதி
னாயிரரோடும்
வக்கிராளுர னென்பவன்பதினா யிரமத
வாரண வலியான்
றெக்கணவளகைக் குத்தரபாலிற் றிங்களங்
குழவியீற்றிருகருஞ்
செக்கர்வான்சடையா னினிதுறைவேதத்தி நமலைச்
சாரலிற் செறிந்தான். (உரு)

கொழுதிவண்டலம்பு மலர்ப்பொழிற்பவாரி கூடன்மா
நகர்த்திருவெல்லை
முழுதுமானமருங்கு பிங்கெறிவளைந்து முழங்கிய
கருங்கட லென்ன
விழுதெரிசிறறத் தானவர்தளம்வந் திறுத்தலு
மெண்ணரும் தவஞ்செய்
தெழுதருமறைதேர் பராசராதி யிருடிய
ரென்செய்வார் திகைத்தார். (உசு)

சுந்தரப்பசும்பொன்னோடகத்தமைந்த துய்யவான்
சுதைக்கடத் தினைப்பூ
பந்தனஞ்செய்து பவாநிநாயகனைப் பரசியப்
பராசரன்முதலோர்
கந்தமேபிரா வதமுகைத்தசலங் களைச்சிற
கறுத்துயிர்காத்த
விந்திரநீயிக் கடத்தினைக்காப்ப தியற்கையென்
றிருடியர்புகழ்ந்தார். (உஎ)

அண்டர்கோன்முனிவ ரிருடியர்குழாங்க ளச்சமுற்
றுரைதத சொற்கேளா
கொண்டலைக்குலவும் வாயுவைவிரிந்த குரைகடற்
குரிசிலைநோக்கி
மண்டலத்திருந்த மருந்ததுதெரியா வண்ணமுண்
புனல்சில மழையாற்
கண்டிடாதாங்கு மல றந்திடப்பெய்து காத்திரென்
றுரைத்தனன் விடுத்தான். (௨அ)

சங்கமால்வரைவே தாசலம்பதும சயிலமா
காகவெற்புயர்ந்த
மங்கலகிரியென் றுரைத்திடும்பஞ்ச
வரைநடு வைகுமாதலத்துட்
டங்கியவேத நாயகிபாகன் சந்நிதித்தெக்கணச்
சார்பிற்
பொங்கிவான்மேக மண்புனல்கலந்து பொழிந்தது
சுதைக்கடம்புதைய. (௨௯)

எதிர்ந்தவரளவுணர் கவர்ந்திடாவண்ண மிரும்புவிக்
கேழுறவாழ்ந்து
புதைந்தவாரமுத கடத்தினைமுனிவர் புங்கவன்
சங்கரனருளாற்
சிதைந்தருங்கொடிய வவுணரைத்துர்க்கா கன்னியராற்
கடந்தாங்குப்
பதித்தவாரமுதைச் சிலபகற்பின்னர் பதிட்டைசெய்
திலிங்கமாப் பதித்தான். (௩௦)

புரைதவிரமுத லிலிங்கநாயகனைப் புலவருமுனிவரும்
    போற்றக்
கரதலவிலிங்க மெனப்பெயர்கவித்தக் கடவுடன்
    சந்நிதிக் கிழபாற்
றிரமுறுதேவ தீர்த்தமொன்றாற்றிச் சிவபராஞ்சுடரினைத்
    தியானித்
திரவொடுபகலொன் றின்றிமாயோகத் திருந்தனன்
    பராசரனென்பான். (௩௧)

என்றருள்சூத முனிவனைமீட்டு மிருமலவலிகடந்
    துயர்ந்த
வென்றிசான்முனிவர் வினவுவாரந்த வெய்யவைத்
    தூர்க்கையருந்தித்துக்
கொன்றதுமன்னோர் கொற்றமும்பின்னர்க் குவிந்துமண்
    புதைபடுங் குடததி
னின்றவாரமுத மிலிங்கமாய்த்திரண்ட நீர்மையு
    மகசூறிநிலையுஞ் (௩௨)

தேனலர்துளவோன் றந்ததெள்ளமுதச் சிவக்குறி
    கரதல விலிங்க
மானதுமாந்த வருந்தவக்குரிசி லலையெறிகாவிரி
    பவாநி
மாநதிகாப்பண் டேவமாதீர்த்தம் வகுத்ததும்
    வரநதியெனுமத்

தூரமுந்தீர்த்த மகிமையுமதனிற் றோய்ந்தவ
ரடைவுறும்பேறும். (௩௩)

விரித்தெமக்குணர்த்த வேண்டுமென்றறவோர் வினவலும் விளம்புவான் பவானி
புரித்திருமகிமை சதுர்முகனாலும் புகன்றிடற்கரிதவ ணொருநாட்
டரித்துமாபதியைக் கண்டெதிர்வணங்குந் தன்மையோர் பலன்சிவபுரத்தி
லிருததிடுமென்றால் வேறினிச்சொலுமா றெங்ஙனநுங்களுக் கியம்பீர். (௩௪)

பதிவுறுமிப்பி வெள்ளியுங்கயிற்றுப் பணியுமேற் படர்ந்தகான்புனலு
மிதுவெனவுலகை யுண்மையினினைந்த வெதிகளாற் புகழ்ந்திடப்படுமம்
முதுநகர்வதரி மூலநாயகனை மூவிருகாலமும் பணிந்து
வதியவர்பலனைக் கற்பகாடவிவாழ் வானவர்களும் பெறமாட்டார். (௩௫)

ஏற்றமிக்குயர்ந்த வப்பெருந்தலத்துக் கிணையடோபிறிதிலை யருநூல்
சாற்றறுக்தவமுந் தானமும்பலவாய்த் தழைப்பதங் காதலரன்முன்னுன்

வேற்றொருபுலத்து மன்னவன்மாசித் திங்களிற்
சிவநிசிவிரத
நோற்றருந்துலாதா னஞ்செய்தியார்க்கு நுவலரும்
பரகதியடைந்தான. (௯௬)

பெருந்திருவுடையோ னளப்பருந்தானம் பெரியவர்க்கத்தலத்
தளித்துப்
பொருந்திடும்பலனைக் குறையுளோனுதவும் பொருள்களியா
தெனினுமங்குயர்ந்தோர்
கரந்தனிற்கொடுத்து வணங்கிடிற்பெறுமாற் கங்குலோர்
பரிதியிற்சிவனை
யொருங்குமெய் யுணர்வால் வலஞ்செய்துதொழுவோ
ரொருகுடைக் கீழ்நிலம்புரப்பார். (௯௭)

பொருதிரைக்கங்கை நதிக்கரையடைந்து
பூசுரர்க்காயிரம் பசுக்கள்
மருமலர்த்துளவோன் முனிமயலொழித்த
வயிரவன் சந்நிதிமுன்றிற்
பரிவுடனளித்தோர் பெறும்பலனிந்தப்
பவாநியம பதிக்கணோர் மறையோற்
கொருபெருஞ்சுரபி யளித்துளோன் பெறுமா
னுரைப்பதென் னுமக்கியாம்பலவும். ([illegible])

பரிந்தொருவைகல் வசிக்கினுமினைத்த
டிபெலாமுடிக்கும் பவாநி

புரந்திருக்கைலை யேயலால்வேறு
புகலவேண்டுவதிலை யனைத்துந்
தெரிந்துளபராசரனங்ககோற்றந்
தெரிதலான்மாயையைச் செயஞ்செய
தருந்தவத்தனைத்து முணர்ந்தனனவனவ்
வுணரைச்செயிக்குமா றறிந்தோ. (௩௬)

## நான்காவது பராசரச்சருக்கம்

முற்றிற்று.

ஆகச்சருக்கம், ச-க்கு விருத்தம், (உ0கூ)'

திருச்சிற்றம்பலம்,





உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஐந்தாவது

# துர்க்கையவதாரச் சருக்கம்.

சொறகவானவா தொழுந்திரு நணைவுளுறையு
மற்கைவாரண வுரிககருணைவாரி யருளால்
விற்கைவாளவுண வேலையைமுன வேதவுமைபாற்
றற்கைமாதர்க ளுதிததவை தொலைததல் புகலவாம. (க)

எதிரிலன்புணாவு ளீரினிது கேண்மினுலகிற்
கதிதரும்பதி கலசிதி குலாமுடியுமா
பதியுவாந்திடு டவாவள மாநகரலால்
விதிதரும்புவன மீதுதலம் வேறுமுளதோ. (உ)

அனையதொன்னகர் வயிற்பயில் புராச னருள்கூர்
முனிவர்தம்மொடு மம்மூரிவடி வாளவுணர்வெவ்
வினையமஞ்சியவர் வீறையற வெல்லமதியம்
புனையுமெகைதிரு வாலையமடைந்து புகலும். (ங)

ஐயநின்னரு ளலத்தினிது காறுமடியோந்
துய்யவாரமு திருத்தின மினிச்சுடுதிறற்
கையராமவுணர் கைக்கொளுவ ரென்றுகவலா
மெய்யர்யாவரும் வெருண்டன ரிருண்டமிடறோய். (௪)

வந்தடைந்தமறை மைந்தனெதிர் வந்தமறலி
சிந்தநொந்துடல் சிதைந்திட முனிந்தகழலாய்
முந்தையண்டமுதல் மூவுலகுமுண்ண முடுகு
மந்தகாரவிட முண்டுயிரளித்த வருளோய். (௫)

பூதநாயக புரந்தரன் முகுந்தன்மலரோ
னாதிநாயக மெய்யந்தணர்க ளாயகவருள்
வேதநாயகி தன்னுபகமெய் வேதசைலச்
சோதிநாயக சரண்சரணெனத்துதி செய்தான். (௬)

நீலகண்டவள கேசுர நிரஞ்சனதிரி
சூலமங்கள சுரூபமணி மார்பசுதையைச்
சாலகஞ்சமென விழிக்கடை நிரம்புதயவாற்
பாலனெஞ்செய்தி யெனச்சுருதியிற் பரவினான். (௭)

சுருதியிற்சொல்பல பேர்கொடு துதித்தளியினாற்
கருதியிவ்வணம் வழுத்தலும் நிரம்புகருணை
விரிதிரைக்கடல தாய்நிறை யிலங்கைதவிமல
னெரியசோதி வடிவாயவ னுதித்தனனரோ. (௮)

பாகனிலாமதி குலாமுடியும் வெய்யபரசு
மானும்வென்றி வரதாபயமும் வேதமடமான்
ஞனிவாவுமொரு பாகமுமிலங்கு தபனர்
போனெடுக்திரி சிரப்படை பொலிந்தவழகும். (௯)

(வேறு.)

இன்னவண்ண மெதிர்தோன்று
மிறையைப்பராசன் முனிவரொடுஞ்
சென்னிமிசையஞ் சலிகூப்பித்
தேவர்தம்மி லிந்திரனே
மன்னுபிரமா திகளின்மிக
வயங்குநான்கு முகத்தோனே
துன்னுமரயா கடவுளரி
லுவணமுகைககுந் தோன்றனே. (௧0)

தரித்தவேணி யுருத்திரர்க
டம்மிலருள்கூர் சங்கரனே
விரித்தமறையுட் சாமமே
வருணநான்கின் வேதியனே
தெரித்தகற்றைச் சுடர்விடுமா
தித்தர்தம்மி லுபேந்திரனே
திருத்தமறைதேர்ந் தினிதுயர்ந்த
தெய்வமுனியி னாரதனே. (௧௧)

உயர்ந்தகடவுண் மடந்தையரி
லுமைநீயொளியிற் கதிரோனே
யியைந்தயோக பண்டிதரி
லிலங்குசனற்கு மாரனே
வயங்குமீசர் தம்மின்மயேச்
சுரனேமல்கும் பறவைகளி

னயர்ந்தகலுழ னீவரையி
னலஞ்சேர்செம்பொற்சைலர். (௧௨)

மதவாரணத்திற் றிறலயிரா
வதரீ நதியின வரநதிர்
கதமார்வீரர் தம்மிலுயர்
கழற்கால்வீர பத்திரனீ
விதமாங்கடவுட் கணங்கடமில்
மிக்கவருள்சேர் விநாயகனீ
பதமீரிரண்டின்மேலாய
பதமாய்விளங்கு முத்தியுர். (௧௩)

மனுககடனிற்சுவாயம்பு
மனுர்பூத மதில்வானீ
நினைக்கவுறுமிந் தியங்கடனின்
மனநீகிரில் வில்லிகளிற்
றனுகசையுளவி ராமனுநீ
தருககடனிலைந் தாருவுநீ
யனைத்துநீமற் றெவகெங்கு
மானபிரம நீயாமால். (௧௪)

என்னுமுனிவன் முனிவரொடு
மிவ்வாறேத்த வெழிற்சுருதி
மின்னுயகன்றன் றிருவுள்ளத்
துவகைபொங்கி மெய்யன்பான்

முன்னேநின்ற முனிவரனை
முறுவல்கூர்ந்து முகநோக்கிப்
பொன்ஞர்வேணி வதரிவனப்
புனிதன்றிருவாக்கருள்செய்வான். (கரு)

புரியுந்தவத்தி லுயர்ந்தவுடைப்
போல்வாரெவரிப் புவனத்து
விரியுந்தலத்து மேலாய்நாம்
வியந்ததலமிவ் வதரிவனம்
பரியுநலத்தா ஞடியெமைப்
பன்ஞள்வழுத்தி மிகநோற்றிங்
கரியதவப்பே றடைந்தவுன
தகத்துநினைத்த தறிந்தேமால். (கசு)

வெம்போரவுண ரீண்டுபய
வேலைக்கடவு ளாரமுத
கும்பமதுகொண் டகல்வரெனக்
கூறிப்புளச்சம் விடுதியவ
ரிம்பர்வியக்கு மிந்நகர்வந்
தீண்டற்கேது முற்பவத்தி
னம்புற்றியற்றுந் தவப்பேற்ரு
லீறிங்கதனுேடிஞர். (கஎ)

முத்திபயக்குந் தலமுலகின்
முனிவகேட்டி யயோத்திபுரி

சுத்தியவந்தி நகர்காசி
துவாரைமாயா புரிகாஞ்சி
பத்திபயக்கு மாமதுரைப்
பதியிவ்வேழிற் பவாநிநக
ருத்தமமதா மிந்நகர்வா யுயிர்நீத்
தோரெம்முலகடைவார். (கஅ)

சாதமாக வுணர்த்தியெம
தருட்சத்திகளாற் றனவரை
மோதிமுறுக்கி நினதெண்ண
முடித்தும்முனிவ வதுகாறும்
போதமகிழ்ந்தெம் மாலயத்துட்
புனிதபஞ்சாக் கரமுன்னி
பேதமகன்றிங் குறைதியென
மீட்டுமமல னியம்புவான். (கக)

தாமலிலவுங் கருங்கூந்தற்சத்திகூடவார்
நால்வர்களெம்
வாமமுவக்கு மறைவல்லிவயினின்றுதிப்பா
ரவராலத்
திசைபயக்குந் தயித்திடைச்
செருத்துச்சகத்து மேலாமிக்
காமர்நகர்க்கு நாற்றிசையுங்
காவலாக விருத்துமால். (உ0)

அலத்தாறெழுகா துணர்விறெடு
மனுதம்பிறப்பிற் செய்ததவப்
பலத்தாலிந்தப் பதியினிடைப்
பயிறல்கிடைக்கு மாதலினாற்
சலத்தாறுவகருந் துயித்தியரித
தலத்துளாவி தனைவிடுக்கு
நலத்தாலவர்க்கு மெளிதாக
நன்கிற்கிடைக்குஞ் சாரூபம். (௨௧)

சதங்கடித்த படையணக்குந் தன்மை
போலச்செறுநர்செரு
வந்திங்கிறககிற் கதியுண்டா மறைதேர்முனியீ
துணைமையெனச்
சிந்தைதெளிதி யெனதெருட்டி யபையமீந்து
தேவியைப்பார்த்
தந்தநிலைமை யருள்செய்து மறைந்தாளிலிங்கத்
தருளுருவமாகி. (௨௨)

இன்னவாறெம் மிறைநிகழ்த்தி மறைந்தபின்ன
ரிருடியர்கோ
னென்னையுலகின் றனித்தமறை யணங்கைவாழ்த்தி
யெழுத்தஞ்சு
முன்னியிருந்தால் சராசரங்கட் குயிராயிருந்த
வொருமுதல்பான்

மன்னுமுமைதன் சத்திகளி ளல்வாதம்மை
வரநினைத்தாள். (உ௩)

நினைத்தகணத்து முரிபுருவ நெற்றியோடு
நெளிந்தலைகள்
கனைத்தகடலி னடுவுதிக்குங் கதிர்வாண்முகமுங்
கடும்படைக
ளனைத்துந்தரித்த கரநிரையும் பிறைவாளெயிறு
மண்டமிறத்
தொனித்தகழலுந் தழற்சிற்றத் தோற்றமொடுமொங்
கவதரித்தார். (உ௪)

நாகநடுங்க விருநான்கு
நகமுநடுங்க வரக்கர்படை
சோகமுறச்செந் தீக்கதிர்கால்
சூலஞ்சுழற்றுஞ் செங்கையார்
'வாகைபுனைந்த முரட்புயத்தார்
மறலிவெருவுஞ் சிற்றத்தார்
சேருளவுணர் பலகோடி
திரளைமேய்ந்த வாட்படையார். (உ௫)

வியந்துஞாலந் தொழுபேக வினையுலவா
வீறுடைய
செயந்திபுகழ்வண் கஞ்சுகமெய்ச்செயர்மர்த்
தினிவெஞ்சிற்றமூறிற்

பயந்துமறலி முதலானோர் பணியுஞ்சண்ட
காதினியென்
றியைந்தநாமம் பெற்றுள்ளா ரெதிர்வேறொருவ
ரில்லாதார். (௨௬)

(வேறு.)

தேவதேவனை யிகழ்ந்துள கொடியனைச் செகுத்து
நாவைவாங்குகோ நாற்கடற் பொதிதழல் விக்கோ
மேவிமேருவைப் பிடுங்குகோ வறிகிலம் வேதப்
பாவையாதுகொல் பணியெமக் கென்றடிபணிந்தார். (௨௭)

வணங்கியின்னண நின்றவர்வாண்முக நோக்கி
நிணங்கொள் வெம்படைத் தடக்கையீர் நீவிர்போயிந்த
மணங்கொண் மாநகர்ப் புறத்தலை கடலெனவளைந்த
கணங்கொள் தானவர்க் கடிந்திவண் வருகிரென் றுரைத்தாள்.

அன்னையெம்பெரு மாட்டியையடிபணிந் தருடஞ்
சென்னிமேற்கொடு சென்றனர் சேண்விசும்புருவுங்
கன்னிமூதெயிற் புறம்புபோய்க் கவிந்துநாற்புறமுந்
துன்னுவோரிடந் தீடித்துளந் துணுக்குறவார்த்தார். (௨௯)

வஞ்சிவேய்ந்தவர் வாய்விடும் வலம்புரியோதைக்
கஞ்சிவானவர் செவித்தலம் புதைத்தன ரழல்கால்
குஞ்சிவாண்முடி நிசரர் கோளரிமுழக்கங்
குஞ்சரத்திரள் கேட்டபொற் கேட்டனர் குலைந்தார். (௩௦)

மைக்கரும்புயல் வண்ணனன்முன் னிழைத்தவஞ் சனம்போ
லிக்கொழுந்தலத் தெதிர்ந்துபோ ரெம்மொடும் புரிவரன்

புக்கமாயையின் புணர்ச்சியோ புராரிமாதவர்க்கரப்த்
தொக்கவீரத்திண்டோற்றமோ வென்கொலென் றயிர்த்தார்.

என்றுபற்பல வெருவுறுமனத்தினு ரெண்ணி
னின்றமந்திரற் குணர்த்துவார் நீஙசதாஙிமித்த
மின்றுநங்களுக் கியன்றதா லினிதுறைகனவிற்
றுன்றுதீக்கனுத் தோன்றலா லீறெனநினைந்தோம். (௰௨)

எண்ணமெம்மனோர்க் கென்னவாய் முடிந்ததென் றிரங்கித்
திண்ணனீங்கினோர் தேறிநின்றொருவழி சேர்ந்தாங்
கண்ணலங்கலி யானைவேற்றானையோ டெதிர்ந்து
கண்ணழற்பொறி சிதறினர் கடுத்துநின் றார்த்தார். (௰௩)

மாதிரந்தொறு மிருந்தவர்வாய்மடித் துறுத்து
மீதுவந்துவந் தெதிர்தலும் வெஞ்சிலை குனித்துக்
காதுறாகக்கைய ரொருவருக் கொருவராய்க் கணையில
சாதுரங்கவாஹினிகளு மூலைபடத் தகைந்தார். (௰௪)

சிலையும்வேல்களுங் குந்தமுநாந்தகத் திரளு
மிலைகொள்சூலமுங் கலிசயுங் கதைகளுமெடுத்து
மலையினார்த்தமர் மலைந்தவாதலையெலாங் கொடிய
கொலையினீர்ங்கணை மாரியாற்றணித்தனி குறைந்தார். (௰௫)

கணையில்வாம்பரி யிராசியுங் கந்துகொல்யானை
நிரையுந்தேர்களு நிருதருநிழன்மணிக் கழற்காற்
பரையின்வந்தபொற் பத்திரையணங்களுர் சிலைவாய்ச்
சொரியும்வெஞ்சர தாரையாற் சூறையாய்ச் சுழன்ற. (௰௬)

துவசமற்றன மார்பகம்பிளந்தன தொலையாக்
கவசமற்றன சிலைபலதுணிந்தன கனலாய்க்
குவிசினதொடு மெதிர்ந்தவர் கொடிஞ்சிமான்றேர்போ
யவசமுற்றனர் சிலர்சிலரிரிந்தனரவுணர். (௩௭)

மடங்கல்போற்சிலர் வாளெயிறதுக்கி வாய்மடித்துத்
தடங்கொள்வான்றொடு தருக்கலைத்தருக்குறு சலத்தாற்
பிடுங்கிமேல்விடச் சயங்கொளும்பிறைமுகக் கணையாற்
கடுங்கணோர்கள்பல் லாயிரங்கண்டமாய்க் களைத்தார். (௩௮)

மதிக்கொளும்பிறை வாளெயிற்றவுணர்வெங் குருதி
நதிக்கணெண்ணில நடிப்பனவலகைகள் கவந்தங்
குதிப்பநோக்கியாங் குவப்பொடு குடங்கரங் கொட்டிக்
கதிக்கவர்ப்பன கூளிகள்களவெலா மன்றோ. (௩௯)

இன்னதன்மையாங் கெட்டிடச் சிலரெழுந்தோடி
மன்னர்நால்வர்முன் வாய்புதைத் திறைஞ்சிவானவரை
வென்றுறச்சயஞ் சொன்னபேர் மெல்லியர்வடிவாய்
மன்னிநால்வருந் தானையை மடித்தனரென்றார். (௪0)

பேசருந்திறற் றானையைப் பேருலகிருந்த
பாசிலைச்சிறு மடந்தையர் படுத்தனரென்ற
வாசகஞ்செவிப் புகுதலுங்கடையுக வடவை
வீசருஞ்சிகை யொடுகொதித்ததாலென வெகுண்டார். (௪௧)

அன்றுவாசவன் முதலினோர்யாரையும் யாம்போய்
வென்றவென்றியும் வீரமுமென்செய விறல்வாய்ந்

தின்றோராயிழை நம்பெருந்தானையை யிரியக்
கொன்றபுன்மையே சாலுமென் றோர்ந்துளங் கொதித்தார்.

வருகதேரென வெயிறுதின் றெழுந்தவக்கிரனை
யருகிருந்தபோர்த் தண்டகன் விலக்கினன் யான்போய்க்
கருகிருட்குழ லானையோர் கணத்திடை யாவி
பருகிமீள்வனீண் டிருத்தியென் றுரைத்தடி பணிந்தான். (௪௩)

வன்மைமிக்கநம் மாற்றல்புன் மாதர்மேலாற்றல்
புன்மையன் றியும் பூவையாருயிர் கோறற்
றன்மையும்பழு தெனநினைந் துயர்ந்துளதக்கோ
ரின்மைகூர்ந்திடின் வெள்கல்போல் வெட்கமுற்றொழிந்தான்.

மட்டில்பாரவெஞ் சிலையினைவாய்மடுத் தெடுத்தான்
புட்டில்வீக்கினன் கவசமும்புயங்களிற் புனைந்தான்
விட்டழன்றவெஞ் சீற்றத்தான்முன்னவன் விடைகொண்
டட்டதிக்குளோர் நடுக்குறக் களத்தடைந் தார்ததான். (௪௫)

கொற்றவாட்படை தோமரங் கணிச்சிவெங் குலிசங்
கற்றைவெங்கதிர்ச் சக்கரங்கதாயுத முசுண்டி
மற்றுமுள்ளன படைக்கல மெடுத்துவா ழுவுணர்
சுற்றினார்திசை தெரிந்தில தூளியின்படலம். (௪௬)

ஆகவத்தடைந் தவர்தமை யணங்கனா ரழன்று
மோகரித்தெழ ஆயவரைவிலக்கியோர் கணத்தின்
வாகைபெற்றியான் வருவலென்றடற்சிலை வாங்கி
யேகவீரையாங் கெதிர்த்தன ளவுணரு மெதிர்த்தார். (௪௭)

அழற்சரம்பல தொடுத்தன ரங்குசமெறிந்தார்
சுழற்செய்சூலம்விட் டார்த்தனர் தடக்கையார்நேமி
சுழற்றிவிட்டனர் தோமரம்வீசினர் சுடர்போ
னிழற்செய் காலவேல் திரித்தனர் கதங்கவுணிருதர். (சஅ)

அரத்தவேணியன் வயிரவான் சிலைகுழைத்தன்னோர்
சிரத்தையாயுதத் திரள்களைத் திறற்சிலைகுனித்த
சரத்தைவாருவகை கவசத்தைப் பற்பலகளையா
விரத்தவாறுகத் துணித்தன னிமையவர் மகிழ்ந்தார். (சகூ)

வந்துவர்க்கெதிர் மலைந்தவர் வடிக்கணைமழையாற்
சிந்தநோதகிய் தண்டசன்றறொடுங்கடிதின்
முந்திமூரிவிற குனிததவள் வாணமுகநோக்கி
புந்துசறநவெங் கனற்கணு ளெருமொழி பகரும். (ருo)

மண்ணிடத்துறை பேதையுன் மருங்குலும்வலியு
மெண்ணிநோககிடி னெகருமென் றித்துணைப்பொழுதுங்
கணணிநோககியான் ருழ்த்தன னன்றியுங் கலைசூழ்
பெணணெனப்பொறுத திருந்தனனதனாற் பிழைத்தாய்.(ருக)

தாரணிககண்மின் னுளுயிர்தடிந்தன னென்ற
பேரெனக்குவந் துறுமன்றி பிழைத்துப்போ வென்னப்
போரரககர்கோன் புகலலும் புரத்தைமுன் பொடித்த
மூரலானென முறுவல்கூர்ந் தாயிழை மொழியும். (ருஉ)

கொண்டிரத்தமுந் தசைகளுநிணங்களுங் கொழுவு
முண்டளப்பருங் கழுதுகள்களைக்கவுன் னுட்லைத்

தண்டகக்கொடுங் தானவசகத்திர கண்டங்
கண்டமர்பொரு கணத்திடைப் படுதேதுவன்காண்டி. (௫௩)

என்றலுங்கொதித் திரும்பிலீ ரைம்பது துலாததிற்
குன்றமன்னதோர் கொடுங்கதை சுழற்றிவா ளெயிறு
தின்றுவீசினன் சேணிடிபோல்வரு மதனைத்
தன்றடக்கையின் றற்சனிவிரலினுற் றகர்த்தாள். (௫௪)

விட்டவெங்கதை பொடிபட வெகுண்டொரு வரிவி
ல்லொட்டளப்பரும வடிக்கணை தூர்த்தவ ளுதலி
னிட்டபொற்பணித் தோள்களி னழுததலு மிகைமபிற
புட்டில்வெஞ்சிலைக்கவசமோர் பகழியாறபொடித்தாள்.(௫௫)

வேறு.

காலவங்கியி னோர்தடங் கைத்தலச்
சூலமொன்றவன் மீதுதூரக்கவு
மாலமன்னவ ளுங்கொரு சூலமவிட்
டேலுமப்படை யிறுக வீட்டினன். (௫௬)

ஏகவீரைமற் றென்றெதி ரில்லதோர்
வேகவெம்படைச சூலம்விடுத்தவ
ளுகவெற்பை யகழ்ந்தவ ளுவியை
மாகமேற்றினவ வானவர் வாழ்த்தினர். (௫௭)

தண்டகாசுர னுகத்தரைக்க ணோர்
கொண்டல்தாழுங் குவடெனச் சாய்தலுங்
கண்டதேவர்கள் கற்பகப் பூந்தரு
விண்டகாரண்மலர் வீதியின் றேத்தினர். (௫௮)

ஏகவீரை யிறையவள் கோயில்சென்
றேகைகூர வணங்கலு மொண்மறைத்
தோகையங்கர்க கீழ்த்திசைச் சூழல்வாய்
வாகைபெற்றங் குறைவர நல்கினள். (ருகூ)

சண்டதண்ட கனிற்றசொற் கேட்டலு
மூண்டதீயின் முழங்கினன் பொங்கின
னுண்டவீர வசுரனென்பா னெடுந்
தூண்டுதேரின னேகவந் துன்னினன். (கூ0)

கங்கம்வீழ்ந்த களத்தின் பரப்பெலாஞ்
செங்கணீருக நோக்கினன் றீப்புகை
தங்குகண்ணினன் றண்டகற் செற்றுளா
ளெங்கெனத்தன் னிதன்கடித் தானரோ. (கூக

கயர்தரிப்பருங் கந்துகங் காற்பல
முயாந்த தேரொடு ருத்திரத் தோற்றமா
யியைந்தவீரன்வந் தெய்தலு மீறிலாச்
செயந்திவீரத் சிலைகொடு மூந்தினள். (கூஉ)

சீயவேறெனச் செஞ்சிலை வாங்கியோ
ராயிரம்பதி னுயிரங் கோடியாய்
மேயவன்னவன் மெய்யும் விசும்புமா
காயமுங்கணை யாகநிரப்பினன். (கூங)

பித்தனங்கை பிடித்தபி னுகமே
ரொத்தவிற்குழைத் தொன்னிழை யானவன்

பத்திரத்திரள் மாய்த்தவன் பற்றிய
கைத்தலச்சிலை யைக்கடிந் தானரோ. (௬௪)

கார்பொழிந்தெனக் கைநொடிப் போதினிற்
றேர்கொடும்பரி சிந்திடத் தானவா
மார்பகழ்ந்திட வாளிகள் செம்புலா
னீர்பரந்திட வெங்கு நிரப்பினன். (௬௫)

கொடிதகர்ந்தன குஞ்சர ராசிகள்
முடிபிழந்தன மொய்பரி மாநிரை
யடிதுணிந்தன வாடகத் தேர்களபோய்ப்
படிபடிந்து கிடப்பன பற்பல. (௬௬)

ஆதிநூல்வடி வாகிய வம்பிகை
பாதமுள்கியப் பாதகர் தம்பெருந்
தீதில்கொற்றத திரட்டிறற் றூணைய
வாதநேருறும் பூளையின் மாறறினன். (௬௭)

வெய்துநோக்கிய வீரன் வெகுண்டெழுமு
கைதெரிந்துள விச்சுவ கன்மனற்
செய்தவெங்கதை வாங்கிச் செயந்திழுமுன்
பெய்தியுங்கரித் திட்டெறிந் தானரோ. (௬அ)

உற்றதண்ட மதோடை மதக்கைமா
நெற்றியிற்றுரும் பாயெள்ளி நெய்கமழ்ந்
தெற்றருங்கதிர்ச் சூலமெடுத்தவன்
கொற்றவாவி குடித்திட வீசினன். (௬௯

தடுககமற்ெறொரு சூலந்தறுகணன்
விடுக்கவாங்கதை வீட்டி விரைந்துபோ
யடுத்தவீரன தாகமகழ்ந் துயிர்
மடுததுமீட்டுஞ் செயந்திகை வந்ததே. (எ0)

வீறுசால்புய வீரனவ் வாக்கைநீத்
தீறில்தேவுரு வெய்தி விமானமீ
தேறிவென்ற செயந்தியை யேத்திவிண்
ணூறுசென்று கயிலையை யண்மினன். (எக)

வென்றிவாய்த்த செயந்திவிரைந்துபோய்
மன்றல்வார்குழ லாரணவல்லிமுன்
னின்றுதாழ்ந்தனு நீயிந்த மாநகர்த்
தென்றிசைசகக ணுறையெனச் செப்பினள். (எ௨)

இத்திறதது நிகழ்ந்தவை யோர்ந்தெழுந்
தைததகாாநிற வஞசக னூறரி
யொதததிண்வலி யானுருத் தெய்தினன்
மாத்திணிபிபெயர் மாதவண் முந்தினள். (எ௩)

கொம்பனனைக் கொடியவன் கண்ணுறீ
யெமபிமார்வலி யீர்ந்திடு நுங்களைக்
குமபமாவினைக் கோளரி கோறல்போற்
செம்புலரவுடல் சேதித்துங் காண்டியால். (எச)

பின்னர்தங்களிற் பித்திளை யாதலாற்
புன்னுனிப்பனிப் போதினி லாங்கவர்

மன்னுதானத்து நின்னையும் வைப்பதற்
குன்னினேமது காண்டி யுணர்விலோய். (எரு)

வேறு.

தானவன் மருத்தினி சாற்றக் கேட்டலு
மானவெஞ் சினக்கனல் மனத்தைத் தீய்த்திட
வானவர்த் தெறுமொரு வயிரவாட்கைகொண்
டானவ னோள்கண்மே லடர்ந்து தாக்கினன். (எசு)

படைச்சுடர் வாளது பருப்பதங்களி
னிடைப்படு மண்ணென விற்றகாலையிற்
றொடைப்புய வஞ்சகன் சோபமுற்றுவாய்
விடப்பருங் கைவலி விறலிற்குட்டினன். (எஎ)

ஊழிவான் முகிலிடி யொருபொருப்பிற
வீழுமா றெனவவன் மீதுதாக்கலும்
பாழிமா முடிபகிர்ந் தறுகுபாய்ந்தபோர்ச்
சூழிமால்யானையிற் சோர்ந்து சாய்ந்தனன். (எஅ)

பருத்தவெண் புகழ்பெறும் பவாநிகூட னின்
மருத்தினிக் குயிர்தரும் வஞ்சகன்றனை
யுருத்திர கணங்கள்கொண் டோங்குவெள்ளிவெற்
பிருத்தின ரிமையவ ரெவரும்வாழ்த்தவே. (எகூ)

மர்த்தினியருமறை மடந்தை முன்புசென்
றித்திற நிகழ்த்தியாங் கிறைஞ்சநோக்கியிச்
சித்திர நகர்க்குமேற் றிசைக்குக் காவலாய்ப்
பத்தியின் வைகெனப் பணித்திட்டாளரோ. (அ௦)

வாவுமாத் தண்டகன் வீரன்வஞ்சகன்
மூவருங்காளியா மூவர்கையினு
லாவிநீத் தருங்கதி யடைதலீதெனத்
தாவில்சீர் முனிவர்க்குச் சூதன்சாற்றினன். (அக)

அடுந்திறற்காளிய ரவுணர் மூவரைத்
தடிந்தவா றுரைத்தனெ தயவினின்னமுந்
திடம்பெறு சண்டகா தினியவ் வக்கிரற்
கடந்ததுங் கூறெனக் களறன் மேயினுன். (அஉ)

# ஐந்தாவது துர்க்கையவதாரச்சருக்கம்.

## முற்றிற்று.

ஆகச்சருக்கம் ரு-க்கு விருத்தம். (உகக.)

திருச்சிற்றம்பலம்.





உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# ஆறுவது

# வக்கிராசுரன் கதிபெற்ற சருக்கம்



தக்கிரக் தொறுவரிற் றனிலயின்றுளோன்
சக்கரம் பெறவருடலைவன் வைகிய
தெக்கண வளகையாந் தெய்வவைப்பிடை
வக்கிரன் பதம்பெறும் வண்மைகூறுவாம். (௧)

தவலருங் கேண்மையோர் கேட்கத்தாபத
னுவலுவான் பின்னரு நொசியுநுண்ணிடைத்
துவரிதட் சசிபுணர் தோன்றலாதியோர்
சுவல்பதம் படச்செலத் துரந்தவக்கிரன். (௨)

சீற்றம்வந் துறிற்றனைத் திரணத்தென்னுவான்
காற்றென வுலகெலாங் கமனஞ்செய்குவான்
கூற்றமுங் காண்குறிற் குலையுங் கொற்றத்தான்
கீற்றுவெண் பிறையெனக் கிளர்ந்த தந்தத்தான். (௩)

கதங்கொடு கிழல்சுழித் தெதிர்ந்து கந்துகொன்
மதங்கவிழ் தறுகண்மான் மத்தவாரணஞ்
சதங்கொடு சதப்பெருக் கெண்ணிற்றங்கிய
பதங்கொளும் புயத்தினன் பருந்தவாயினன். (௪)

நனைப்பருங் கற்பக நாடுநதெண்டிரை
கனைப்புறு மோரொழு கடலுந்தேர்கொடு
சினைப்பருங் காலெனச் சென்றுசுற்றியே
நினைக்குமுன் றன்பயினிலையுளெய்துவான். (ரு)

அன்புறத் தன்னொடொத் தமைந்தமாரத
ரானபதி னாயிரத் திரட்டியோருளான்
பொன்பயி னேமியம் பொருப்புமேருவு
மின்புற வினைதனை விறற்குன்றோள்களான். (சு)

பூண்பொலி திலங்குதோட் புலவர்கோன்முதற்
சேண்பயில் சூரர்க டிசையுளோர்சமர்
மாண்புற வந்தெதிர் மலைந்தபோதிவன்
காண்பது பின்னவான் முகங்கள் கண்டிலான். (எ)

இன்னணம் பெ ராற்றலி னிருந்துளானெதிர்
மன்னினா சிலர்கரம் வாய்புதைத்துநின்
றுன்னலர்க ளிடிவனு யும்பிமாரெலா
மன்னினர் தெம்புலவ கன்னிமாதரால். (அ)

கேட்டனன் கடையுகங் கிளர்ந்தவங்கியோ
னாட்டநீர் நெருப்புக நக்கவெண்பிறைக்
கோட்டெயி றதுகவான் குலையக்கொல்படைத்
தோட்டுணை நோக்கினான் றுரோணனோக்கினான். (கூ)

தடையகல் கேசரி சைலமாமுழைஞ்
சிடைபசித் தியங்கண்மே லெழுந்தபோலெழுந்

தலையல்ர் சொரிந்தகூ ரயிலுமாழியும்
பொடிபட வச்சிர கவசம்பூட்டினான். (௪0)

கொலைசெயுஞ் சரமெனுங் கொடியகஞ்சுமிழ்
சிலையெனும் பாந்தளைத் தேவராதியோர்
கலையயில் புற்கள்வாய் கவரவென்றதோண்
மலைமிசை யேற்றினான் மடித்தவாயினான். (௧௧)

எடுத்திட வெடுத்திட வெஃகமெஃகமாய்க்
கொடுத்திடுந் தூணியுங் குவவுத்தோட்புறந்
தொடுத்திடக் கட்டினான் சுருதியோன்றரும்
படைக்கல முள்ளன பலவுமேந்தினான். (௧௨)

பரசொடு சூலம்வெம் பாசகாந்தகங்
கரசிரகேடகங் கடிய வாளயில்
சிரசிடைச சிலவர்கள் தாங்கித்தெண்டிரை
முரசமுங் கிழ்ப்பட வந்துமுந்தினார். (௧௩)

கடகரிபரிபல கட்டி யீர்த்திடும்
தடநெடுந் தேர்கொடு பாகர்சார்தலுந்
தொடுகழ லவுணர்க டோன்றல்பேரியும்
படகமு முழங்கியாற் பரிக்கவேறினான். (௧௪)

விண்ணவர் வக்கிரன் வீரத்தன்மையைக்
கண்ணுறீஇ நடுங்கினர் கலங்குநெஞ்சின
ரண்ணலம் பணுடவி யாதிசேடனுந்
துண்ணெனப் பஃறலை துளக்கினனரோ. (௧௫)

தேரொலி மும்மதஞ் சிந்துசிந்துரக்
காரொலி விலாழிவாய் கலுழுங் கந்துகப்
போரொலி யவுணர்தோள் புடைத்துத் தாக்கிய
பேரொலி திசாமுகம் பிதிரவீங்கின. (௧௬)

மாற்றல ரெனப்பகர் வறியகாளினை
யாற்றலாற் பற்றிவா யருந்திநீற்றிடச்
சிற்றவெங் கனற்கடுந் தீயைமூட்டிடுங்
காற்றெனுந் தளத்தொடுங் களத்தைநண்ணினன். (௧௭)

பங்கமி லெம்பியர்ப் படுத்தபேதைய
ரெங்குளார் வரவென விரைத்தகொற்றவெண்
சங்கொலி யங்குள சண்டகாதினி
மங்கைதன் றிருச்செவி மடுத்தகாலையின். (௧௮)

கறைகெழு முத்தலைக் கடியசூலங்கொண்
டிறையவன் முப்புர மெரிக்கத் தோன்றிய
முறைமையிற் படைக்கல முழுதுமேந்தியாண்
டுறைகழ லணிங்கம ரகத்தையெய்தினள். (௧௯)

வந்தவ டனைக்குறித் தழற்கண் வாய்ப்பொறி
சிந்தவின் றன்னையுஞ் சிறிய வெம்பியர்
தந்திறங் கவர்ந்துளார் தமையு மாதபன்
மைந்தன்மா நகர்குடி வைப்பன் காண்டியால். (௨௦)

கொத்தழற் செங்கணன் கூறலுமாலுற்
றித்தனை வலியுமுன் னெதிரில் வீரமு

மத்திர மொன்றினு லறஞ்செய் யார்கடங்
கைத்தென விமைக்குமுன் கடிவன்காண்டிநீ. (௨௧)

பிறர்மனை நச்சினோர் பெருமைகேண்மைநல்
லறமினை குறைதல்போ லடைந்து நின்னுளேச்
செறிபவர் தம்மையுந் திரணப் போதினீண்
டெறிசுடர் வாட்கொ யிடுவன்காண்டிநீ. (௨௨)

கொற்றவை குறுநகை கோட்டியிவ்வணஞ்
சொற்றசொற் கால்செவித் துருத்தியூடுபோ
யெற்றெறுஞ் சினக்கன லெழுப்பவிந்திரன்
மற்றெறுஞ் சிலையைவாய் மடித்துவாங்கினுன். (௨௩)

வடிக்கணை கடையுக வருடநேரெனத்
தொடுத்தனன் ஞெடுததலுஞ் சுருதிநாயகி
யடித்தல நினைந்துபோ ராழிமேலிவர்ந்
தெடுத்தன ளொருசிலை யேமவெற்பென. (௨௪)

விரைவினிற் குனித்தவன் விசிகரசியி
னிரையினைத் தொலைத்துமே னிரப்பிடும்பல
சரநிரைத் தரரைக டடக்கைமாமத
வரைகளைப் புரவியை மடித்தவாலரோ (௨௫)

இரைந்தன ரவுணரிங் கிருவர்கார்முகஞ்
சொரிந்திடு வடிக்கணைத் துங்கமாரியால்
விரிந்தன கடல்களும் விசும்பும் வேணியுந்
தெரிந்தில வமரருந் திடுக்கமெய்தினர். (௨௬)

வேறு.

மரியொக் குங்கணு ரிருவருமிடம்வலங் கறங்காய்த்
திரியக்கண்டிலாத் தேவருந்தீச்சிலை வழங்கு
மரியொக்குஞ்சர வனன்முகம் படப்படப் பஞ்சாய்க்
கரியக்கண்டனர் தானவர் சேனைவெங்கானம். (உஎ)

தன்னையொப்பருஞ் சண்டகாதனிியெனும் வீரக்
கன்னிமற்றொரு கன்னலின் வக்கிரன் கடவும்
வன்னெடுந்தடங் தேரினைப் பாகனைவயிரக்
கொன்னுதிச்சர தாரையாற் குலைந்திடக் குமைத்தாள்.()

ஒல்லையிற்பருந் தரையிடைக் குதித்தொரு நொடியிற்
கொல்லயிற்படைக கூற்றனுன் குரைகழல முழங்கப்
பல்விதப்பதி ஞயிரயோசனைப் படிவாய்
வல்லையிற்றனி தோன்றினன் வரிசிலையோடும். (உகூ)

இருவரைப்புயத் தவுணர்கொ ளாற்றலினமைந்த
வுருவநோக்கிற டானுமவ்விருமடங் குருவா
யிருமையிற்பொலிந் தீண்டினனிமையவ ரெவரும்
வெருவவெஞ்சிலை குனித்தனர்விளைத்தனர் வெம்போர்.

மங்குறேய்ந்திடு வரனகநோக்கினும் வளைந்த
வங்கண்மாநில நோக்கினுமாசையை நோக்கிப்
பொங்குமேமரெழு புணரியைநோக்கினும் புவன
மெங்குநோக்கினு மிவர்சிலை யுமிழ்ந்திடுஞ் சரங்கள்.(௩க)

பட்டதானவ ராக்கையைக் கரியவாம் பரியை [றுகக்
வெட்டியீர்த்துடற் குறைகளைத் தொன்றேொன்றி

கட்டியாடுவ கவந்தம்பல் தெறிந்திரு கரங்கள்
கொட்டியாடுவ பூதமுமலகையின் குழாமும். (௯௨)

இன்னவாறமரியற்றுவேற் சயமகளென்னும்
பொன்னனாள்புயப் பொருப்பின்மேலழற்சரம்போத
மின்னெயிற்றவன் விடுத்தலும் வெகுண்டொருகணத்தி
லன்னலாள்புனலம்புதொட் டாங்கதையறுத்தாள். (௯௩)

பண்டுகோன்முகன் பாற்பெற்ற பத்திரம் பணைத்தோட்
சண்டகாதினி யுரத்திடை யுடற்றினான் றழற்கட்
டிண்டிறற்சினச் சயமகள் செக்கர்வாணிறக்கைக்
கொண்டல்வாளிவிட் டககணை யாற்றலைக்குறைததாள்.

அரக்கர்கோன்கதி ராழியான் சரந்தொடுத் தார்த்தான
புரத்தைவென்றருள் புங்கவன் பொருகணை விடுத்த
சரத்தைமாற்றினா டானவன் பன்னகவிசிக
துரத்தினானதை யுவணவெம் படையினாற் றொலைத்தான்

சிங்கவாளிவிட் டார்த்தனன் சிந்துவாகினிசார்
மங்குல்போல்பவன் சிம்புள்வெம்படையினான் மாற்றிட
பங்கமோகவெம் படையெடுத்துடற்றினான் ஞானப்
புங்கம்விட்டதைப் போக்கினானொருதினைப் போதின்.

பொருதவீரனிப் பூவையைச் சரங்களால்வெல்லற்
கரிதெனத்துணிந் தொருகதை யங்கையாற் சுழற்றிக்
கருதிவீசலுங் கதைபல்கண்டமாச் சிதைத்தா
னொருதினைப்பொழு தினிலுலை பழுத்தகூர்ங்கணையால்,

வேறு.

அண்டகோடிகள் பதைக்கவன்றுவரு மந்தகாசுரனைமாறு மித், திண்டிறற் சினவில் வீரனென்றுசில சித்தியாவடு திறற்சி னச், சண்டகாதினியொர் கொற்றமுந்திய சரந்தொடுத்தவன் வனைந்திடும்,பண்டயன்கணுறு கவசமுஞ்சிலையி ஞனையுந் துணி படுத்தினன். (௩அ)

வச்சிரத்தனைய கவசமற்றுமடல் வரிசிலைக்குணமறுந்துமாங் கச்சமற்றமன வலிநிசாசரனொ ரயிலெடுத்தனை யகழ்ந்துடற் பச்சிரத்தம தருந்தியாருயிர் படுப்பலென்றெதிர் விடுத்தனு மெய்ச்சுவற்கமுறை வோருவப்பவொரு வேல்தொடுத்ததனை வீட்டினன். (௩௯)

குறையிற்கடிது கொலைபழுத்தொழுகு துங்கவாள்கிடுகு கொண்டெதிர், மாறியொத்தட லமர்க்களத்திருவர் மலைவுறு மபொழுது நெடுவிசும், பாறிடைக்கருணை வேதவல்லிதிரு வருளினுகுமச ரீரியொன், றீறில்கொற்றமுள சண்டகாதினி தன்னிருசெவித்தல நுழைந்ததே. (௪0)

ஆய்வுறும்பல படைக்கலங்களிலி வவுணர்புங்கவன தாரு யிர், மாய்வதின்றயன் வழங்கியிட்டபெரு வரமுமன்னதடு மா றுகேள், தீயவெங்கொலைய மயிடமத்தக சிருங்கமொன்று கொடு தெற்றெனை, மேயவிங்கிவ னுரம்பகுந்துயிரை வீட்டிநல் லகதி காட்டென. (௪க)

இருவிசும்பிடை யெழுந்தவாய்மைமொழி யிவ்வணஞ்சொ லவுணர்க்குவெந், கரியசெங்கண்விரி கவையடிக்குறிய கா

விறற்கடமை யுலவையெரன், றருவியங்கவ னுரம்பகுர்திட வுடற்றினுள்குருதி யாறுக, வருவியஞ்சைல மெனமபங்கியெதி ரவுணர்புங்கவன் வீழ்ந்தனன். (சஉ)

பொறிகலங்கியலம் வந்துசோபமொ டிரண்டரைக்கடிகை போதலு,மறிவுவந்தினி தூதிக்கவாணவ மகன்றுசத்துவ குணத்தனுய், கிறையுமன்பினிரு கண்கணீர்கலுழ நெஞ்சகங்குருகி நீருக, மறைதொழும்பெரிய சண்டகாதினியை நோக்கிவச்சிரன் வழுத்துவான். (சங)

முன்னைநான்மறை முடிக்குமெட்டரிய முதல்வியாயுலகபேழினுக், கன்னையாகியுள நின்னையொன்றுமறி யாதபுல்லறிவினுயினேன், மன்னியிங்கரி னின்றுநெஞ்சமர் மலைந்தவெம்பிழை பொறுத்துமற், றென்னையுய்யும்வழி செய்தல்... தென்றுமீளவுமியம்புவான். (சச)

மெய்தருஞ்சுருதி வாய்மைதெய்வபல மிலைவுற்குமிகு துயதி, யெய்தலுண்மைய தெனத்தெருட்டுமொழி யென்னினைப்பெரிதிருந்தசா, னெய்தலொண்கண்மலை வல்லியேயனந்தோ ங்கிடாதுமறநெறிப்ல,செய்தனன்கொடியபாவியேனருள் செறிந்திடுங்கருணை யங்கணுய். (சரு)

என்றுபற்பல பணைக்கரஞ்சிர மிணைத்திரங்கின னியம்பு மன்றலங்குழன் மடந்தைவாண்முக மலர்ந்துபேரருளளித்துநீ யொன்றுமஞ்சலை யுனக்குவேண்டுவ துணர்த்தியீகுது மெனதொழா,வன்றிறற்கரிய குன்றமன்னபுய வச்சிராசுரன் வழுத்துவான். (சசா)

(வேறு)

கன்னியர்க் கரசேகின்னைக் கண்களாற் காணப்பெற்ற
ன்னலப் பலத்தினுலு நான்மறைக் கரிதாமிந்தப்
பொன்னியங் தலத்தருகின்றே டியாணமர் புரிந்ததாலு
மென்னுடை நாமமென்று மிந்நகர்க் கிருத்தல்வேண்டும். (௪௭)

பருந்திரை யுறழ்பவாகிப் பாஞ்சுடர் தனக்குமென்பே
ரிருந்திட வேண்டுமுன்கை யெறுழ்வலிப் படையாற்சால
வருந்துமென் னுவிக்கிந்த வைப்பிடை விரைவின்மேதிக்
கருந்தலைச் சிருங்கம்வாங்கிக் கதிபரித்தளிக்கவேண்டும். (௪௮)

இவ்வண மன்புனோடு யிரந்தலும் விரைவின்வேதத்
தெய்வநாயகியைச் சகண்ட காங்கிசென்று தாழ்ந்தெம்
மையனை யிறைஞ்சியிவ் வா றுரைத்தனு மருள்கூர்தென்ன
செவ்வர மனைத்துமற்று நருவருள்சிறப்ப நல்கா. (௪௯)

பருவமகமா வுரிப்பிரானும் பணையுமுன் பணித்தவாறே
கருங்கடனிருதர்வேந்தைக் கருணைகூர்ந் துரந்துண்மேதிச
சிருபகவெம படைவாங்க சிவசிவவெனக்கைகூப்பி
யொருங்குபே ராவிவிட்டா னும்பர்பூமாரிதூர்த்தார். (௫௦)

அந்தரத் திருந்தோர்தெய்வ வாடகமணிவிமானம்
வந்தொரு கணத்தினெய்த வடிவமும் தேசாய்த்தோன்றிப்
பைந்தொடி தன்னைவேதப் பாவையைப் பவாநிகூட
வந்தையை வாழ்த்திமேற்கொண் டெய்தினன்கைலைக்கம்ம.

கயிலையை யடைந்துதெய்வக் கணங்களிற் பொலிந்தானிப் பான், மயிலியற் சாயற்றண்ட காதினிமடந்தைவேணிப்

புயல்கிடந் துறங்குஞ் செங்கேழ்ப் பொன்முடிச்சேர்பிலெய்தி
யயில்புரை நெடுங்கட்செவ்வா யாரணக்கொடியைத்தாழ்ந்
தாள். (௫௨)

பத்தியின் வணங்கிநின்ற பத்திரை தனைப் பவானிக்
குத்தரதிசையின்வைக வுவகைகூர்ந் தருள்செய்தோங்குஞ்
சித்திகள்பலவுநல்கி விடைதந்தாள் தேவர்போற்றக்
கத்திகையோதிமின்னாள் வடதிசைக் காவல்பூண்டாள். (௫௩)

வென்றிகொள் குணபாலேக யீரையுஞ் செயந்திமின்னாள்
தென்றிசை யிடனுமேல்பாற் செயமருத் தினியுநெய்வர்க்
கன்றிய சிற்றச்சண்ட காளினிடைக்குமாகி
மன்றலம் பவாநிகூடல் வைகினா ருலகமுய்ய. (௫௪)

கேசவன் புசமுமர்தா னினிதி கடாதநெய்மைக
காசியம் பதிக்குக்காளி காவலாயிருத்தல் போலப்
பாசிழைத் தூர்க்காகன்னிப் பாவையர் பவாநிகூடற
றேசுள நகர்க்குநான்கு திசைகளுஞ் சிறந்தாரன்றே. (௫௫)

அங்கண்மா ஞாலத்துள்ளோர் யாரேனு மனையகன்னி
மங்கையர்ப் பூசையாற்றி வணங்கிடி னினைத்தபாடும்
பொங்கமா யடைந்துவாழ்வர் புரவலர்பூசித்தாரேற்
றுங்கமா நிதிக்கோவாகித் துன்னலர்க் கடந்துவாழ்வார். (௫௬)

மண்ணிடை வானங்குன்றின் மதிநுதற் கருங்கட்செவ்வாய்
வெண்ணகைத் தூர்க்கைமாரை வேண்டிமெய் யன்பிற்பூசை
பண்ணிடின் மாரிபெய்து பலவளஞ் சுரக்குமித்தப்
புண்ணியக் காதைகேட்கிற் போதவுஞ் செயங்களுண்டாம். ()

இனையபே ராற்றற்கன்னி யேந்திழை மார்களாலவ்
வனைகழற் புனைகாற்றின்னடோள் வக்கிரனுதியாய
முனைகெழு மவுனையாரு முடிந்தபின்முனிவர்கோமா
னனையதொல் பராசயோகி யளப்பருங் களிப்பிலாழ்ந்தான்.()

(வேறு.)

தொக்கமான் மறைதேர் முனிவர்முப்பொழுதுந் தொழவ
ருள்திருவண்ணறவுடைய, முக்கணனடியார்க்கெளியனுதலினுன்
முறைநளமயிலை வக்கிரன்வேண்ட, வக்கிரபுரமென் றந்நகர்க்
கடிறபேர் வரம்பெறவைத்தனன்றனும், பொக்கமில் தவத்
துவக்கிரேசுரனாய்ப் பொலிதன னிரம்புமாதவவால். (௪௯)

காதமர்பணிலக் குழையினனருளால் வக்கிரன்கதிபுகுசீர்மை
யிதுனைசரு தனியபபலுமிறும்பூ தெய்தியசவுனகாதி
மாதவராரு மகிழ்சிறந்த்த மருந்தருஞ சிவக்குறிவனைஹு
மோதருக்கடவுட் டோர்தமுமுறையி னுணர்தருதி விரித்தினி
யென்றார். (௫௦)

திருச்சிற்றம்பலம்.

## ஆறுவது வக்கிராசுரன் கதிபெற்றசருக்கம் முற்றியது.

ஆகச்சருக்கம் ௬-க்கு விருத்தம்—(௩௫௧)

திருச்சிற்றம்பலம்.





உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஏழாவது

# அமுதலிங்கப் பிரதிட்டை.

## வரலாறுரைத்த சருக்கம்.



மகந்தவாதியற்று முனிவர்சூழ்பவர் வைப்பிடை வககிரன
கயிலை, புகுந்தவாறினிது புகன்றனம் இனிப் புண்ணிய நகரி
டைமூன்றனை, முகுந்தனுங்களித்த வானக்குடத்து முதிராசு
வை யாரமுதெடுத்துச், சுகந்தமாரிலிங்கப் படிவமாய்ப் பதிட்
டைதொன்முனிபுரிந்தமை சொல்வாம். (க)

கரிசறுத்துயர்ந்த சவுனகாதிக்கடவுண் மாமுனிவரர் கேட்ப
வுரைசெய்வானசூதன் றொல்லைநாளயனை றொல்லையி லொழி
ந்தபின்பராச, னிரைசெறிவதரிநீழுறையகன் சலதிசகுபேனரு
ளியின் றிசைவா, யரிதினிலாழ்ந்து கிடந்தவாரமுத கடர்தனை
யுகழ்ந்தனனெடுத்தான். (உ)

படிமிசைப்பன்னூன் மண்சிலைமாரிபதித்திடப் புதைந்ததே
ன்னமுதங், கடினமாயொன்றாய்த் திரண்டிடநோக்கிக் களிப

பொடு கங்கைநேக்கெறியு,முடியுளபரம விலிங்கவாகார மீதெ
ன முனிவர்கோ னினைந்தாங், கடியவர்பலர்க டம்மொடுமமுத
வருட்குறிபதித்திட னினைந்தான். (௩)

ஆர்த்தலைபுராணும்பாற்க டலமுதமாழ்ந்திடு முனைழுஞ்சினையமு
த,தீர்த்தமாயியபறறி யன்னதிற்கங்கைச் செழுநதியாகியதெய்வ
நீர்த்திருநதிக ளனைத்தையுமாவா கனஞ்செய்து திருமலனருளா
லேத்தருமுனிவர் கமண்டலதீர்த்த மெனையுமவ் வோடையி
ற்பெய்து. (௪)

எண்ணருந்தவத்தோர் தம்மொடுமந்த வெழிற்சுதா சங்கம
தீர்த்தப், புண்ணியத்தடத்தைப் பூசனைபுரிந்து பராசரன்
போதவைத்தெழுந்து, முண்ணினைந்தாடி விதிமுறைக்கடன்க
ளுவகையின்முற்றிய பின்னர்ப்,பண்ணவர்மூவா யிரவருஞ்சங்
கற் பந்துடன்குடைந்தறமுடித்தார். (௫)

பூத்தருள்சொரியுங் கற்பகநாட்டுப் புண்ணியககடவுள ருவ
ப்பக், கோத்திரத்துயர்ந்த பிதிர்க்கடவுளர்கள் குதுகுலித்துவ
கைமிக்கூரக், கேத்திரபிண்ட மிரணியசிராத்தமெனமறைவி
ளர்த்தியவனைத்து,மாத்திரிதண்ட வைதிகமுனிவர் வரன்முறை
வழாதவண்முடித்தார். (௬)

எல்லையிறவததோர் தம்மொடுப்பின்ன ரிகபரமுணர்ந்து
யர் பராசன், வல்லையினெழுந்து மறையொடுந்தெய்வ மங்க
லதூரிய முழங்கத், தொல்லையவதரி மூலநாயகனை வலஞ்செ
ய்து சுதாகடத்தொடும்போந், தல்லுறழ்கண்டத் தெந்தை
யாலயத்துக் கணித்ததாநிருதியின் றிசைக்கண். (௭)

சம்புமாதேவன் சங்கரன்சைவச் சங்கமச்சிவக்கொழுந் திரு
க்கைக், கம்பிதூரத் தடைந்தனர்சைவ வாகமமுறையின்
வேதிகைசெய், தும்பரும்வியக்கு மங்கலமுகூர்த்தத் தொளிதிக
ழ்திப்பிய வமுதைத், தம்பருங்கரத்தா லிலிங்கமாய்த்திரட்டிப்
பாராசரன்றாபனஞ்செய்தான். (அ)

கதிதருமமுத விலிங்கநாயகனைக் காவிரிகரைபொருபவா
னி, நதிநடுநிலத்துப் பதிட்டைசெய்தன்பர் ஞானமாதவர் சுர
ரோடும், விதிமுறைவழாது பூசனைமுடித்து வேதமோர்நான்
கினும்விளங்கு, முதுமொழிப்பயனாற் றடங்கணீர்புரள முன்
னர்நின் றிறைஞ்சினன்றுதித்தான். (கூ)

வலந்தருபுலிக்கான் மாதவன்மழலை மதலைபால்வேண்டிட
விரங்கி, நலந்தருதண்பா லறுங்கடல்பரிந்து நல்கியநம்பனே
போற்றி, சலந்தருங்கனகன் றாக்கியதுணிற் சனித்துமானிட
மடங்கற், கலந்தசெங்கதிரோ னனையகூராழி யளித்தரு ளம
லனேபோற்றி. (௧௦)

பொருப்புரங்கடந்த புங்கவன்றலைப் புறந்தரப்பொருத
வன்றந்தை, யுரப்பரும்புயங்க ணெரிகிடம்வாருசற் றூன்றிய
தாளினைப்போற்றி, முரிப்புறுபுருவ நெரிதருவாய்மடித்த முய
லகக்குறளினைச் செந்தீக், கரப்பருங்கணங்கள் பிதுங்கிடமிதித்த
கழன்மலர்க்காலினைப்போற்றி. (௧௧)

அடுத்தனிநெடுகோன் பூட்டியகன்ன லஞ்சிலைகுனித்தலர்க்க
ணைக, டொடுத்தவனுகந் தூள்படச்செந்தீச் சொலித்திடு நுத
ற்கணைப்போற்றி, முடுக்குறுகொற்ற நிசாசரர்புரங்கண் மூன்

றையுமொருதிணைப்போதின், மடுத்தெரியுண்டு தேக்கிடவழங்கும் வாரணைகக் குரிசிலேபோற்றி. (கஉ)

திருந்துமாலயனு மிருகிலங்கீண்டுஞ் சிறகடித்தெழுந்துமேற்பறந்தும், கிரந்தரந்தேட வண்டமூடுருவ கிமிர்ந்தருள் சோதியேபோற்றி. பரிந்துபேருணர்வாற் பற்றெலாமற்றுன் பதமலாற் பரம்பிறிதிலையென், றிரந்திடுமேழை யெம்மனோர்க்கிரங்கியெளிவருமீசனே போற்றி. (கஙு)

கந்தடுதறுகட் கடாங்கவுட் பனைக்கைக் கதக்களிற் றுரியனே போற்றி, யந்தகனுவி பறித்தசெஞ்சூல வடற்படைச் செங்கையாய்போற்றி, வந்தெதிர்கூற்றை மடித்தொருமறையோன்மைந்தனுக்காருயிரளித்த, சந்திரமவுலிசசடையனேபோற்றி சங்கராசயசயபோற்றி. (கச)

ஞானநாயகனு யடியனுக்கிரங்கி நறுஞ்சுதை கவர்ந்திடவெழுந்த, தானவர்க்கடிந்திவ் வதரிகாவனத்துட் சந்ததம்விளங்கியென்பொருட்டால், வானவர்க்கரிய சுதாமயலிங்கவடிவமுமாயினையென்னு, மேனிமிர்செங்கை முகிழ்த்துநாத்தழும்ப விவ்வணம் விமலனைத்துதித்தான். (கரு)

மறைவழியொழுகும் வைதிகவிரதர்தம்மொடும்வடித்தபேரனபா, னிறைதருபராச னிம்முறையுணர்வா னிமலனைப்பழிச்சலுமலக், கறைகெழுமிடறும் பிறைதவழ்சடையுங் காதலம் பொலிவு மெண்டோளு, மெறிகதிர்மூர னிலவொடுந்தோன்றியிறைவனவ்விலிங்கமூடெழுந்தான். ([illegible])

கரந்தை யஞ்சடையான் வெளிப்படக்கண்ட கறையறுமுனிவர்கோனுருகிப், பரிந்தெதிர்சிறப வருளலைகொழிக்கும் பார்வையான் கடைக்கணோக்கி, யருந்தவநீயிவ் வழுதிநேலிலிங்க மமைத்திவண் பதிட்டைசெய்தன்பாற், புரிந்தபூசனையான்மகிழ்ந்தனமெனத்தன் பொன்முடியசைத்திவை யருள்வான்.

தலங்களின்மேலாந் தலமிதின்வதரிச் சாகைவாய் முளைத்திடுமூல, விலிங்கம்விட்டகலா துறைதல்போலிந்த வெழிற்சுதாமயம்பொலிந்திலங்கு, நலங்கொளிக்குறியின் வைகுவோமிந்த நற்சுதாமயசிவக்குறியை, யிலங்கியார்பூசித் திறைஞ்சினுமூல விலிங்கபூசனைப்பல மடைவார். (கஅ)

அறநெறியிகழ்ந்தோர் குரவரைப்பழித்தோ ரந்தணாரும் பொருள் கவர்ந்தோர், பிறர்மனைவிழைந்தோர் பொய்மொழிநாளும் பிதற்றுவோருஞ்சுவைத்துண்போர், நறவினைக்குடிப்போர் துணிந்துபொய்ச்சான்று நவிலுவோர் நான்மறையோராக், கறுவுவெஞ்சினத்தாலிகழ்ந்துளோருயர்ந்த கற்புடையரைப்பழுதுரைப்போர். (கக)

தந்தையைத்தாயைத் தமர்களைவிருந்தைத்தணப்பருமனைவியைத் தகைசான், மைந்தரைநாளும் வழிபடுவோரை யதிதியைவான்சுதைப் பசுவைப், புந்தியிற்பரிந்து புரந்திலோர்கண்டி பூதியையிகழ்ந்துளோ ரெம்பாற், சந்ததம்விளங்குந் தண்டுழாயலங்கற் றலைவனைப்பிரித்து வேறுரைத்தோர். (உ0)

திருமைசாலவைக்கண் வழக்கினிலோர முரைத்துவோரொண்பொருள் கவர்ந்து, கருமலர்நெடுங்கட் டெரிதட்கனி

வாய்க் கன்னியர்க்கொடுத்துளோர்காத, லுரிமைவேறிருப்பப் பழிபடுகணிகையொள்ளிழையார்நலந் துய்ப்போ, ரிருமைசால் பிறர்தந்திருவினிலழுக்கா றெய்தினோர்பிறர்க்கிடரிழைப்போர்.

மங்கலநெடுநாண் கந்தரத்தொழிந்த மங்கையர்ப்புணருவோர்மாற்றா, தங்களையெறிவதல்லது சேர்ந்தார்த்தடிந்துளோர் சதுமறைபுகன்ற, புலகமார்கடவுட் புண்ணியத்தலங்கண் மகிமையைப்பொய்யென நினைவோர், பைங்கயலூர்நீர் மொக்குளின்வாழ்க்கை மானிடர்ப்பாடியே திரிவோர். (௨௨)

என்றிவைமுதலா மளப்பரும்பவங்க ளனைத்துமிக் காவிரிபவாநி, யொன்றியநகர்க்க ணடைந்துநீகண்ட வொண்சுதாநதிபடிந் துவப்பா, லின்றுநீயமைத்த சுதாமயவிலிங்கத் தெம்மையாராதனை புரியிற், றன்றியபனிவெஞ் சுடர்தெறத்தொலையுந் தன்மைபோற்றொலைந்தருள் பெறுவார். (௨௩)

எனத்திருவாக்கா லருள்செய்துமீட்டு மிருந்தவன் வேண்டியவரங்க, ளனைத்தையுநல்கி யமலனாய்விளங்கு மச்சுதாவிலிங்கத்துள்வதரி, வனத்துறைவேத நாயகிபாகன் மறைந்தனன் வானவர்மலர்க, ளனைத்தையுந்தூர்ப்ப முனிவ ரரவென்றார்த்தன ரஞ்சலி முகிழ்த்தார். (௨௪)

ஈங்கிவையமல னருள்தரப்பெற்ற விருடியர்புங்கவன் மகிழ்வுற், றுங்கமுதிருந்த குடத்தினைக்கொடுபோ யச்சுதாசங்கமத் தடத்து, ளோங்குறப்பதிப்பக் காவிரிபவாநிக் குள்ளுறவூற் றெடுத் தொழுகி, நாங்கிளர்மூல வாகினியாகிக் கலந்ததச்சங்கமநதிவாய். (௨௫)

பொன்னியேகங்கை யமுனேயேபவாநி பொருவரும்பரா சரன் வகுத்த, மின்னவிரமுத நதியதேவாணி டல்லதூவேறல லிந்தத், தன்னிகர்பிறிதில் தலந்திரிவேணி சங்கமமாதலாற்றெ ன்பரற், கன்னிமாமதில்சூழ் காசியின்மேலாய்க் கவினுமிக்கடி நகர்மாதோ. (உசு)

புரையறுதவத்துப் பராசரனமைத்த புண்ணியவாரமுதிலிங் கம், கரதலந்திரட்டி யமைத்தலானமங் கரதலவிலிங்க மூவுல குஞ், சுரர்களுஞ்சுருதி யருந்தவர்குழாமுந் தொழுஞ்சுதா சங்கமவிலிங்கந், திரனுறுமிந்தத் திப்பியவிலிங்க நாமமிவ்வாற தாய்ச்சிறக்கும். (உஎ)

(வேறு.)

இன்னதொல்லாரமுத லிங்கமூர்த்திதன்
சன்னிதிக்கெதிரரு டௌத்தவானுளோர்
மன்னெடுங்கரங்களால் வகுத்தகழுந்தெடுத்
தின்னறீர்தீர்த்தமொன் றியற்றினாரரோ. (உஅ)

திரனுறுதெள்ளமு தளித்தசெங்கண்மால்
வரனுறுங்கருணையால் வானுளோர்கழுந்
தரனுறக்கண்டதா லுயர்ந்துளோரொலாஞ்
சிரமுறுதெய்வதத் தீர்த்தமென்பரால்.

சுரர்கரமலர்களாற் றொட்டதாதலிற்
கரதலதீர்த்தமென் றுரைப்பர்காட்சிகூர்
சரதநன்னெறியினி தளிக்குஞ்சார்ந்ததி
றொருமுறைகுடைந்தவர்க் குண்மையீதரோ. (கூO)

திருத்தகுங்கடவுளர் செய்ததீர்த்தம்புக்
கருத்தியினாடியங் காதிகேசவன்
மருததிருமலரடி வணங்கினையதிடுங
கருத்தினிலுள்கிய கருமம்யாதுமே. (௯௧)

மந்திரமாந்திரு வாரிமீமிசைச்
சந்தம்விளங்கிடுந் தலைவதண்டுழாய்ச்
செந்திருமார்பக தெவ்வர்க்காய்ந்துயர்
புந்திகூர்கடவுளர்ப்புரந்தநேமியாய். (௯௨)

ஆரணக்குரவனை யாடகாம்புயப்
பூரணநாபியம் பொகுட்டினேந்திய
நாரணவெனத்துதி நவின்றுநாண்மலர்ச்
சீரணிபதயுகந் தியானஞ்செய்துபின். (௯௩)

நின்றிருவடிவமாய நிரம்புமிப்புன
லின்றினிதாடுது மெனவுளன்பினாற்
சென்றதிற்படிந்துதற் பணஞ்செய்வோர்திரு
நன்றிசால்பயனெலா நன்கிற்றுய்ப்பரால். (௯௪)

நவையறுசுரர்தட நண்ணினாற்குலத்
தெவரெனுமிம்முறை படியினீர்ங்குழற்
றுவரிதட்கமலைமென் ரேருகைநாயகன்
றவலருந்திருவரு டழைக்கவாழ்வரால். (௯௫)

மெய்ச்சுடர்நடுவுற மேடத்திங்களிற்
றச்சனுஞ்சுரர்தொழுந் தடத்திற்றற்பணித்

திச்சையினுடிலே ரிகத்தெலாமடைந்
தெச்சநூறவற்கரு மின்பந்துயப்பரால். (ருசு)

மதிகதிரவனிடை யொன்றும்வைகல்வாய்
நதியொருமூன்றுசேர் நலங்கொடீரத்தின்
முதிர்புனற் சிரார்த்தங்கண் முதலசெய்குனர்
கதியினிற் குலத்தொடுங் களிப்பின்வைகுவார். (ருஎ)

தேசினிற்கிளர்துலாத் திங்களிற்றுலா
ராசியிற்பாற்கர னுறும்போதினின்
மாசறமூவுணமாய் மலினயாக்கையைத்
தூசகன்றொழிந்திடச் சுத்திசெய்துபின். (ருஅ)

தன்னுரியவளொடுஞ் சங்கற்பத்தினம்
முன்னதிமுகத்திடை யடைந்துமூழ்கினோர்
முன்னையபிறப்பொரு நூறின்முற்றிய
பன்னரும்பவங்கனற் பஞ்சிற்றீயுமால் (ருகூ)

இந்திரைநாயக னினிதினீன்றருள்
மைந்தனைநிகர்த்திடு மைந்தர்பெற்றினுஞ்
சந்ததந்தனதனைத் தரைக்கண்வாழ்ந்தபின்
கந்தரங்கறுத்தவன் கழற்கணெய்துவார். (சo)

இந்தமூன்னதிகுடைந் திரங்கியன்புகூர்ந்
தந்தணற்கோதன மருத்தினோருயர்
சந்திரமண்டலஞ் சரித்துவாழ்ந்தபின்
பிந்திராசனத்திருந் தின்பந்துய்ப்பரால். (சக)

இருபிறப்பவர்களி லொருவற்கேனுமிவ்
வருநதிதீரத்தி லன்னமீய்ந்திடின்
வருபலன்விளைந்தநெல் வயலெலாந்தரப்
பெருகுறுபலனினும் பெரியதாகுமால். (௪௨)

திங்களையிரவியை யரவந்தீண்டுநா
ளங்குருகக்ஷேத்ர மாதிவைப்பிடைப்
பங்கமில்தானஞ்செய் பலனெலாந்தருஞ்
சங்கமந்தியிலோர் தானஞ்செய்திடின். (௪௩)

கள்ளுணான்பொறிகளைக் கடிந்தமாதவன்
றெள்ளிதிற்றொடுஞ்சுதா தீர்த்தந்தோய்ந்திடிற்
கொள்ளைவெம்பவமெலாங் குறிப்பறிந்தருள்
வள்ளியோர்ப்பொருணிதிநேர் வறுமைபோலுமால். (௪௪)

காற்றெறவுடைபகு காரின்வெம்பவ
மாற்றிடுந்திப்பிய வளங்கொடீர்த்தங்கட்
கேறமீண்டிசைத்திட லெல்லையில்லதாற்
சாற்றினஞ்சிலவெனப் பின்னுஞ்சாற்றுவான். (௪௫)

(வேறு)

இத்தனையசுதாலிங்க மகிமையுந்தீர்த் தாதிகளினிருமையாவு
மெய்த்தபிராமணருந்தவன்வேண் டிடக்கருணை கூர்ந்தளித்தவி
யல்பினாலே, சந்ததமும்விளங்கியரு டழைதநிடுந்தெக்கணவா
கைத்தலத்துவைகுஞ், செந்திருமால்விடையாற்குத் திருவிழா
பபராசமுனி சிறப்பித்தானால். (௪௬)

சித்திசிறந்திடுமேடத் திங்களின்முன் பக்கமதிற்செங்கைநா
ளுஞ், சத்தமியும்பொருந்தியிடுஞ் சுபதினத்திற் றுசாரோணங்
தான்செய்துள்ளப், பத்தியொடுமிந்திரனே முதலாயதேவர்மு
தற் பதவிவாழு, முத்தமனைப்பராசமுனி வரவழைப்பவனைவ
ரும்வந் துற்றாரன்றே. (சஎ)

பங்கமில்சீர்முனிவர்சுரர் பராசனைப்பார்த்தமுதநதி பவாநி
பொன்னளிச், சங்கமத்தானமும்வதரித் தாருவுமச்சாலைகயின்கீ
ழ்த் தயங்குங்கோடி, செங்கதிர்போன்முளைத்தமுக்கட் டே
வையுநும் மாலியாங்க டெரிசித்தேமென், றங்கவர்கள்புகழ்
ந்திடவு முனிவர்பிரான்முகமனுரைத் தன்புகூர்ந்தான். (சஅ)

மங்கலதூரியமுழங்க மறைமுழங்கவைங்கரனை வழுத்திப்பி
ன்னர்க், கங்கைமதிச்சடையானைப் பூரணைநாட்காறுமுயர் கட
வுட்டச்ச, னங்கையினலமைத்தவெழில் வாகனத்துந்தினந்தி
னமு மமரர்சூழ்ந்து, செங்கைமலர்குவித்துவர மறுகுதொறுந்
திருப்பவனி சிறப்பித்தானல். (சகூ)

இந்நெறியாயிருடியர்கோன் றிருத்தொருக்க டொறுமுல
கீன் றெடுத்தவேத, மின்னெடுமைங்கரன்குமரன் முதற்றே
வரொடுமிலங்கை விமலன்றன்னை, மன்னிலத்திலுள்ளோருநா
கநாட்டுறைவோருநயனந்துஞ்சாப், பொன்னுலகத்துள்ளோ
ரும் போற்றநவதினமும்வலம் புரிவித்தானல். (ரு0)

பருவமுறும்பூரணைநாட் டனதனடாத்தியசுவணப் பதுமா
காரத், திருவுருவம்பொலிந்ததடந் தேர்கண்மிசைத்திரிபுரங்
கள்செற்றகொற்றத், தொருவனைவேதாம்பிகையை யொரும

ருப்புளோனை யயிலோனையேற்றி, யருமறைவாழ்த்தெடுப்ப
வுல குய்யவுயர்திருவிழா வாற்றினுல். (ருக)

புண்டரிகப்படிவாய பொன்னிரதத்திருவிழாப் பொலிவை
க்கண்ணுற், கண்டவருந்தேர்ச்சிகரங் கைகூப்பித்தொழுதவரு
ங்கயிலைவாழ்வார், தண்டடந்தேர்வருமுன்னர்ச் சதுர்த்தசிநா
ளினையதிருத் தலபுராணங், கொண்டுணர்விற்பாராயணம்
புரிந்தாற் பிரமகத்திகுலையுமன்றே. (ருஉ)

இம்முறையெம்பிரானுர்க்குத் திருவிழாவிருடியர்கோ ளிய
ற்றியாங்கு, மும்மலநீர்முனிவரொடும் வதரிநிழன்முளைத்த
சிவ முதலைத்தன்பூங், கைம்மலராற்பதித்தருளுங் காதலநாயக
னையறு காலந்தோறு, மம்மர்கெடப்பூசித்து மாதவஞ்செய்தந்
நகரின் வதிவான்மன்னே. (ருங)

பொற்கலத்துப்பால்கலந்த வமுதிருக்கப் பசித்தொருவன்
புழுங்கல்போலு, நற்கடிநீர்நன்கிருப்பவொருவனீர்நசையாற
வறந்தல்போலுங், கற்பகம்போனிழலிருப்ப வொருவனெடுந்
தீச்சுரத்தாற் காய்தல்போலு, மற்புதலிங்கமிருப்ப வடைந்
துய்யாதொருவனைய லடையுந்தன்மை. (ருச)

திருந்தியவிங்கர்காமந் திருநஞ்சசங்கமகேத் திரஞ்சீர்சா
லப், பொருந்துமகாவீரபுரம் விசயநகர்வதரிவனம் புவனமூன்
றுந், தெரிந்திடுதெக்கணவளகை பராசரகேத்திரம்பிறவி செ
குத்துஞானம், பரிந்தருள்வக்கிரபுரம்பே ரானந்தநெறியளிக்
கும் பவாநிகூடல். (ருரு)

சேணுடர்தொழுஞ்சுருதிச் சேயிழைபங்கமர்ந்தசிவக் கொ ழுந்தைச்சென்று, காணுதகண்ணுமந்தக் கடிநகரைவலஞ்செய் யாக் காலுமேலா, மாணுநற்கதியளிக்கும் திரிவேணிசங்கமத்தி ன்வந்துதோயா, வீணுனயாக்கையுமா ணிடரடையின்சேத னமே வேறென்றன்றல். (ருசு)

அங்கதேயத்தினிரும் தொருமறையோ னினையதலத் தடை நதுமுக்கட், சங்கமேசனைவழுத்திக் கதிபெறல்போனிவிரும த்தலத்தினுண்மை, பொங்குபேரன்பினொடுமுணர்ந்தனுட்டித் திடுதிரனப்புகன்றனன்பி, னெங்குமாய்நிறைந்தசுதா விலிங்க வரலாறனைத்து மெடுத்துசுருதன். (ருஎ)

# அமுதலிங்கப் பிரதிட்டைவரலாறுணர்த்த

சருக்கம் முற்றிற்று.

ஆகச்சருக்கம். எ - கசு விருத்தம். (சoஅ)

திருச்சிற்றம்பலம்.





உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

எட்டாவது

# மாலுதானவிருடிசரித்திரச் சருக்கம்.



மேலுளானமுதச் சிவகோசம்விதித்தவண்
ஞாலமுய்யவழி படுநீர்மை நவின்றனஞ்
சாலவின்னுமோ ரந்தணன் சேய்வடுச்சாபமாய்
மாலுதான முனியினொழித்தல் வழுத்துவாம். (௧)

சங்கையில் தவத்தோன்றனை மீட்டுமெத்தாபத
ரங்கதேய மறையவன் யாவரிலங்நகர்த்
தங்கியெப் பணியூற்றி வெஞ்சாபந் தணந்துபோய்
நன்றடைந்தனன் சாற்றெனச் சூதனவிற்றுவான் (௨)

உம்பர்க்கோய் விலுவப்புற வேள்வியுளுற்றிடு
மம்பொற்றூர்ப்புரி நூன்மணி மார்பரளப்பிலார்
நம்பற்போற்றி யினிதுறை யோர்நகர் நாவலஞ்
செம்புத்தீவினி லங்கர்தந் தேயத்திருக்குமால். (௩)

தேவராலையமுந் தருமங்கள் திளைத்திடு
நாவினொன்மறை நாளுநவிற்றி நலத்தொடு

மோவிலாரழற்கூட்டிப் பின்னுண்ணுமுயர்குலப்
பூவினார்சுரர் வாழ்தலிற் பொன்னகர் போன்றதால். (௪)

திருமினாமெச்சிர்நகர் வேதியர்தங்களிற்
றருமசாலனென் றோர்மறை யோனுயர்சைவமெய்ப்
பெருமைசான்றவன் பெண்ணொருபாதியன்பெய்கழற்
கொருமைநீடுமெய் யன்பினன்மிக்கவொழுக்குளான்.(௫)

அத்தியானபரன்றரு மங்களனைத்தையு
நித்தியாகமநீர்மையிற் செய்பவனெஞ்சகச்
சுத்தியான்பரிசுத்தமு ளோர்களுடன்பயில்
பத்தியான்பரமார்த்த வியாபகப்பண்புளான். (௬)

இன்னதன்மையன்றன்வழி யெக்கியசன்மனென்
றுன்னுநாமமுளான்பல வோமமுஞற்றிய
தன்மையன்றன் மரபினொழுக்கந் தவாதவன்
வன்னியோம்பி வளர்ப்பவன் மாசறுமாண்பினான். (௭)

தாங்குபேரறஞ் சார்தரு மெக்கியசன்மனென்
றோங்குமந்தணன் பாலொரு சேய்வந்துதித்தனன்
பூங்கழைச்சிலை வேளினும்யாணர்ப் பொலிந்துளான்
றேங்குமாற்றல்கொடே வளர்ந்தான்வளர்திங்கள்போல்.

வட்டவாண்முக மைந்தனை நாமம்வடுவென
விட்டழைத்தன னின்னமு மோர்பெயரேற்றமே
தொட்டதன்ம சருமனுமாமென்ச் சூட்டினான்
சிட்டன்மைந்தன்றனக்கு வயதைந்து சென்றதால், (௯)

வென்றியாரணவேதியன் சேய்க்குபவீதமா
மன்றலாற்றினன் வைதிகநன்னெறிக் கேற்கவே
யொன்றுதேசிகன் மாட்டருநூல்களுணர்த்தினன்
வன்றிறற்சுதனிந்நெறி மாண்புறவாழுநாள். (கo)

வேறு.

தக்கபேருணர்வுநல்குங் கல்வியுட்டயவாற்றந்த
மிக்குயர்குரவற்போற்றி வியப்புறுதருமசன்மன்
றெக்கணையளித்துமீட்டுந் தேசிகற்பணிந்துதங்க
ளொக்கலைப்பிதாவைத்தாயை யுவப்பொடுஞ்சென்றுதாழ்ந்தான்.

அங்கவராசிகூடி யிருக்குநாளவனுக்கன்பால்
மங்கலவதுவையாற்றத் தொடங்கினர்மரபுக்கேற்ற
தங்குலத்துயர்ந்தசார்பிற் றனிமகட்பேசிமன்றற்
கிங்கினிதாற்றவேண்டும் பொருளெலாமீட்டுமெல்லை. (கஉ)

றிசுடரழல்வேட்டுண்ணு மெக்கியசருமனென்னு
மறையவன்மகனைநோக்கி மைந்தபோய்மகத்துக்கேற்ப
வறைதருதருப்பைகுஞ்ச மரசமம்பலாசமாதி
நிறைதருசமித்தையெல்லாங்கொணர்கெனநிகழ்த்திவிட்டான்.

படுவெனுந்தருமசன்மன் மறைச்சிறுர்சிலவரோடுங்
கடிதினோர்வனத்திற்புக்கான் கடவுண்மாமகத்திக்கூட்டப்
படுவனக்காட்டம்வேண்டிப் பழுவத்துட்படருங்காலை
வுறுதவத்துவைகா னசமுனியிருக்கைகண்டான். (கச)

காலுனுந்தவத்துவைகா னசமுனிக்கடவுண்மைந்தன்
சாலநன்குணர்ந்தமாலு தானமாதவக்கோன்வேத

மலையுமுடிவுகண்டோன் புண்ணியநலங்கொடீர்த்த
ஞாலமீதுள்ளவெல்லாம் யாத்திரைநடந்துதோய்வோன். (கரு)

பிண்டமைம்பொறிகளாதி விடையவாசனைநீத்தாங்கோர்
கண்டனீர்த்தாருநீழற் றவஞ்செய்தான்றவஞ்செய்வோனைக்
கண்டனன்றருமசன்மன் சிற்றினங்கலத்தலாலே
பண்டையவிதியின்சார்வாய்ப் புந்தியும்பாய்ந்ததன்றே. (கசு)

விரிந்துமேற்படருங்கற்றை வேணியுமேனியெங்கும்
பொருந்தியவுரோமக்காடும் வள்ளுகிர்பூண்டகையும்
பரிந்துளவிகாரரூபப் படிவுமுற்றிருந்தானென்று
தெரிந்துமண்கற்கள்வாரிச் சிந்தினர்திருமெய்மீதின். (கள)

தன்னையுமறந்துமேலாந் தத்துவமுணர்ந்தியோகத்
தின்னிலைகண்டுதூங்கா தினிதுறங்கிடுவோன்றன்னைப்
பின்னருமணற்கல்வாரிப் பெய்தனர்பெரியோன்கண்டாங்
கன்னவர்சிறுசொன்றுன்னி யகன்றுவேறிடத்திற்போனான். ()

அறிந்தவனகலப்பின்சென் றறிவிலார்புறத்திற்றுக்க
வெறிந்தனர்கல்லாலந்த வெல்லையிற்சிறிதுசீற்றம்
பிறந்ததுகல்லாய்நீவிர் பீடழிந்துறுமினென்னச்
சிறந்துளோனறிவுகொன்ற சிறியர்மேற்சாபமிட்டான். (கசு)

ஆயிடையறத்தைநோக்கு மர்தணன்சாபமென்னுந்
தீயிடைவாடியோடிப் பணிந்துநாஞ்செய்தகுற்ற
நீயிடைபொறுத்துக்காத்தி கிகரிலோயென்னயார்க்கும்
தாயினுமினியானுள்ளத் தயாவொழுமுறைப்பதானன். (உ0)

தக்கவர்குலத்திற்றோன் றுந் தன்மையிருமக்குத்தந்த
விக்கடுஞ்சாபநீத்தற் கேதுவொன்றிசைத்துமிந்த

மைக்கருங்கடனீர்சூழ்ந்த மலர்தலையுலகின்மேலாய்
மிக்கதோர்கடவுட்டான முண்டதுவிளம்பக்கேண்மின். (௨௧)

தெக்கண திசையிற்கொங்கு தேயத்திற்றிகழுமந்த
மிக்குயர்தான முன்னீர் விளைவினிலுண்டோன்றந்த
பொக்கமில்பொன்னியாறும் பவானியும்பராசப்புத்தே
டொக்கபேரன்பாற்கண்ட தூய்யதெள்ளமுதயாறும். (௨௨)

ஒன்றதாய்க்கூடுமந்த வொப்பருந்தெய்வத்தான
முன்றிருவதரிநீழன் முளைத்தருள் சுயம்புமூர்த்தி
தன்றிருநிருத்திக்கிற் றயங்கிடுமதனைலந்த
மன்றன்மாநகரங்கொங்கின் வதரிகாவனமென்றோருஞ்சும். ()

வந்தவர்பாவமென்னும் வறுமையையறுத்துஞானச்
சுந்தரவாக்கநல்குஞ் சுயம்பிரகாசமாகிச்
சந்ததம்விளங்குமுத்தித் தலமதையல்லால்வேறு
மைந்தர்காள்பிறிதுகாணே னென்றனன்மற்றுஞ்சொல்வான்.

மாசகல்கயைதன்மாடே யாயிரமறையோர்க்கன்ன
நேசமுற்றளித்துந்தற்ப ணதிகணியயத்தோடும்
பேசருங்குரவர்தேவர் பிதிர்க்களுக்கியற்றிற்கோடி
பூசுரர்க்கன்னதானங் காசியிற்புரிந்தபேறும். (௨௫)

பருவருங்கயையின்மாட்டு வடதருநிழலின்ஞாங்கர்ப்
பரிவொடும்புகல்பிரேத பருவமூலத்தின்றன்கீ
ழொருமறையோனுக்கன்ன முதவிடிற்சுருதிநான்கு
மருமையினோர்ந்தகோடி யந்தணர்க்கருத்தனேராம். (௨௬)

தில்லைகாளத்திகாஞ்சி திருமுதுகுன்றஞ்சேணர்
தொல்லையவருணைகும்பீச் சுரமுயர்சுருதிக்கான
மல்லலந்திருவையுாறு மதுரையாலங்காடிந்த
வெல்லையில்தலங்களெல்லாம்விசேடமென்றிரைக்கும்வேதம்.

இன்னதொல்தலங்கட்கீண்டி விப்பிரரொருவற்கேனு
மன்னமரங்களிக்கிற்கோடி யந்தணர்க்கருத்தும்பேறும்
பன்னுமித்தலங்கடோறும் பயின்றதானப்பேறெல்லாம்
பொன்னியிற்பவாநிகூடும் புகழ்நகர்கொடுக்குமன்றே. (உஅ)

அருட்டுறுவாசதீரத் தருணடம்புரிவோன்முன்றிற்
றருத்தரைநட்டோன்வாழுஞ் சன்னிதியிடத்தும்பவ்வ
முருக்குமுன்னதிசூழ்தெய்வச் சங்கமமுகத்தின்முன்னி
யொருட்பிடச்செய்ததான மொன்றினுக்கனந்தமாமால். (உகூ)

இனையதொல்தானத்தீண்டி யீசனைக்குறித்துமுன்னூல்
புனைபவருவப்பத்தானம் புரிந்திந்தத்தலபுராண
மனையவர்தம்பாற்கேட்கு மன்புளோர்கடல்நீரொல்லாந்
தனியறப்பெய்துதானந் தந்திடுபலத்தைதச்சார்வார். (௬௦)

செறிபொழிற்பவாநிகூடற் றிருநகரடைந்தியாரேனு
மறையவர்தமக்கோர்முட்டி மாதவர்தமக்கோர்பிட்சை
யறிவுட்னளித்தோரிந்த வம்புவிதிலமெல்லா
முறுசுடர்க்கதிர்போனேமி யுருட்டியோர் குடைக்குளாவார்.

மணிதிகழமுதக்கேணி பவாநிகாவிரிவந்தொன்று
மணிபுனறோய்ந்துநூலோற் குதவினவளித்ததாயோ

ரிணையறுதெய்வலோகத் திற்கடைக்காமதேனுப்
பணிபுரிந்தேவல்செய்யக் கற்பமும்பயில்வர்மாதோ. (௩உ)

கங்கையம்பதியிற்கோடி கபிலையான் கற்றோர்க்கீயுந்
துங்கநற்பலமிங்கிந்து சுடர்புகுந் தினத்தும்பாந்தள்
பொங்கிரு சுடற்காய்நாளிற் றிங்களும் பிறப்பிற்போத
மங்கல மறையோர்க்கன்பாலோர்பசு வழங்கினோற்காம். (௩௩)

ஞானவாரமுதலிங்க நாயகன்றனக்குங்கீழ்பாற்
பீனவார்தேவதீர்த்தம் பெட்புறத்தோய்வோற்கங்க
வீனமதகலுமீசற் கேறுவிட்டவர்க்ள்வெள்ளி
மானகத்திருந்தெம்மீசன் மலர்ப்பதமடைகுவாரால். (௩௪)

பூரணைத்திதியுமாங்குப் பொருந்தியவுறுமீனுளுஞ்
சார்வுறினமுதலிங்க பாரிசந்தயங்குசெவ்வே
லோராறுமுகப்பிரானை யொண்கருநெய்தற்போதா
லாரினிதற்சித்தாலு மருங்கவிவல்லோராவார். (௩௫)

திங்களோராறுமந்தத் தேமலராற் பூசித்தா
லங்கவர்முகரேனு மருந்தமிழ்க்கார்வெற்பார
மங்கலமுனிபோலாவ ரங்கத்தால்வலஞ்செய்வோர்கள்
பொங்கொளியரசராய்முப் புவனமும்புரப்பரன்றே (௩௬)

(வேறு)

மகரத்தாதபன் வந்துளிவண்சுதை
திழ்பொற்றீர்த்தஞ் செறிந்திடுஞ்சங்கம
முகநற்றீர்த்தத்தின் மூன்னினின்றுடியாங்
குகரத்தாளை யுதவினுங்கினோர். (௩௭)

மன்றல்வார்சடை வானவன்வாழ்வுறு
மின்றயங்குகயிலையை யெய்தினிற்
சென்றுயோனிச் செனனத்தைவேரறக்
கொன்றுகோடி குலத்தொடும் வைகுவார். (௩௯)

சுருதியன் றியம் மேன்மைமற்றோர்சொலற்
கரிதுறுங்கட் கடைந்தவிச்சாபமப்
புரிதனிற்சென்றப் புண்ணியதீர்த்தமாந்
திரிவிதப்புன றோய்ந்திடிற் றீருமால். (௩௯)

மாலுதானமுனிவனிவ் வாய்மையைச்
சாலவோதித் தவத்துறைவைகினன்
மாலுளந்த தருமசன்மன் மறை
வாலரோடு மருண்டுவழிக்கொள்வான். (௪0)

கலையெலாந்தனி கற்கினுமூழிலாற்
கலகில்புல்லறி வேமிகுமாதலாற்
குலனில்வந்து நன்கோதியுநந்தமக்
கிலகுமிக்குறை யெய்திற்றென் றேங்கினன். (௪௧)

இந்தவாறுனி யேகுமளவையி
னந்தமார்க்கத் தடைந்தவர்கண்ணுற்றீஇ
வந்துசாபம் வலித்திடும்வாறெலாஞ்
சிந்தைபாற்சென் றுணர்த்திடச்சாற்றினர். (௪௨)

பேதையோங்கள் பிழைத்திடப்பின்னுமம்
மாதவத்தனருள்செய்த வாறெலாம்

போதவோதவிரங்கினர் போயினர்
யாதினும்விதி யாற்றலைவெல்வர்யார். (சங)

மட்டில்யோகவை கானசபுத்திர
னிட்டசாடம்வந் திம்மெனாமன்மறைச்
சிட்டாமைந்தரைச் சீறிவந்தாக்கையைத்
தொட்டகாலையிற் கலலெனதோன்றினர். (சச)

தேயாதவெண்பிறைக் கண்ணியைசெஞ்சடை
வேயாதமுக்கண் விமலனருளினா
லாய்ந்தருந்தவ ரோறைம்புலனகளைக்
காய்ந்துளார்கதம் யாவாகடந்துளார். (சரு)

மாலுதானமுனிவவ ரோதயன
போலயாவா புரையறநோற்றுளோர்
மேலுமன்னவன மேன்மைபெரிதெனச
சலருககுயா ரூதலைமெருட்டினன். (சகூ)

## பட்டாவதுமாலுதான விருடிசரித்திரச்

## சருக்கம முற்றிறறு.

ஆகசசருக்கம் அ-கரு விருத்தம். (சருச)

திருசசிற்றம்பலம்.







சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஒன்பதாவது

# தருமசன்மன்கதிபெற்றசருக்கம்.

கந்தனுகருந்தவவை கானசமுனிக்கோன்
மைந்தனதுசெய்கையை வழுத்தினமெய்ஞ்ஞானந்
தந்திடுபவாகிக சிற்றருமசன்மன்
வந்துருவடைந்துகதி மன்னியதுசொல்வாம். (௧)

தொல்லையமுனிக்குருசில் சொற்றசுடுசாபம்
வல்லையிறெழிந்துமறை மைந்தர்நெறிகூடி
நல்லகதியெய்திய நலம்புகறியென்று
வெல்லையிலருந்தவர் வினவிடவிசைப்பான். (௨)

வன்மையுளகற்படி வமைந்துவனநிற்போர்
தன்மையவர்முன்சொல வுணர்ந்தவர்தனிப்போய்
நன்மகவினைக்குள சமித்துநனிகொண்டு
தன்மகன்வரத்துனிய தந்தையையடைந்தார். (௩)

வந்தவரையெக்கியசன் மன்றழல்வளர்ப்பான்
கொந்துறுசமித்துகள் கொணர்ந்திடவிடுத்த
மைந்தனிதுகாறுமனே வந்திலனுடன்போ
நந்தனர்களுந்தனக நண்ணிலர்களென்றான். (௪)

எண்டருவனத்திடை வழிக்கணெதிர்நீவிர்
கண்டிலிர்கொலோவெமது காளையரை யென்று
விண்டமொழிகேட்டனர் விளம்பிடமறைத்தா
ரண்டரானையானவர் முகக்குறியறிந்தான். (ரு)

ஐயமெவனுள்ளவை யகத்துமறையாதீண்
டோய்யெனவுரைத்திடுதி ரென்றலுமுயர்ந்தோய்
தையலர்மயங்கெழி றகுந்தருமசன்மன்
மையின்முனிசாபமிட வன்கலுருவானான். (சா)

கூடவருபூசுர குமாரருமவன்றன்
மாடுதுறுகல்லென வனத்திடையிருந்தார்
நாடுதிவிரைந்தென நவின்றமொழிகேளா
வாடினன்மிகுந்துயர வாரியில்விழுந்தான். (எ)

காதினனுரத்தையிரு கைகொடுசிரத்தின்
மோதினனருங்கலைகண் முற்றுமெனதையா
வோதினைகொலின்னவை யுனக்குவரவோயுன்
போதவனத்திடை யுகுத்தினன்முடிதடுதேன். (அ)

அருந்துயருளந்தவனை நோக்கியறிவுள்ளோய்
வருந்தலைமனக்கவலை மாற்றும்வழியுண்டாற்
றெரிந்தமுனிசாபமது தீரவுபதேசம்
புரிந்தசெயல்கேள்விகள் புலப்படவுரைத்தார். (கூ)

சுரத்திடையெமக்குமுனி சொன்னமுறையெல்லாம்
விரித்தினிதுரைத்துன்மகன் வெய்தினெனமைநீர்போய்த்

தரித்திலிர்களொன்றுகுறை யாதெமதுதந்தைக்
குரைத்திடுதிரென்றவ னுரைத்திடவடைந்தேம். (க0)

என்றுமறைமைந்தன்மு னிசைத்தநலமெல்லா
மொன்றுமறவாதவ ருரைத்திடவுளததிற்
றுன்றியிடுகேதமத கன்றுசுரர்நெஞ்சு
ணின்றொளிர்பவாநிநகர் நித்தனைநினைந்தான். (கக)

கிட்டினர்களன்பொடிரு கேள்வியினருந்து
மட்டவிழ்பவாநிமகி மைசரவணததால்
விட்டதுபெருந்துயர் விரோசனகரங்கள்
பட்டிடவுடைந்திடு பனிப்படலமென்ன. (கஉ)

வல்லமறையந்தணன் மனத்திடையிருந்த
வல்லல் களிமைப்பிடை யகன்றதருளில்லாப்
புல்லறிவினோரிடை புகுந்திருவுமேலா
நல்லுணர்வினோர்கணுறு நல்குரவுமென்ன. (கங)

உய்திறமுணர்த்தியிதை யதத்துளுவகைத்தேன்
பெய்தவர்தமக்குறுதி பெய்துவிடைநல்கி
மைதவிருளத்தன்மறை யோர்பலர்களோடும்
வெய்தினினடந்தனைய வெஞ்சுரநுழைந்தான். (கச)

ஏகுநெறியிற்பறவை யேந்தலிடமாயுங்
காகம்வலமாயுமெதிர் கண்டிடுநலத்தால்
வாகைபெறுமோர்தரு மருங்குநிழன்மைந்தர்
தேகமுழுதும்பொலி சிலாவடிவுகண்டான். (கரு)

மூசுபிறவித்துயருண் மூழ்கியிடுகோயத்
தாபிணையறுத்தரு ளளித்தடிமைகொள்வான்
பாசிளையொர்பங்கொடு பவாநி-புரிவைகு
சனருளிவ்வண மிருந்ததெனவுன்னு. (கசு)

கருக்கொளிருளுட்கவரு காலையினுதிக்கு
மருக்கன்வரவம்புய மலர்ந்ததெனவிண்ணோர்
புரிக்குமயர்சங்கம புரோசனருணெஞ்சை
யுருக்கியிடநெகருள முடைந்துருகிநின்றான். (கஎ)

விசையையுளவிப்பிராரின் மேலவன்மெய்யன்பி
னிச்சைகொடிரங்கியடி யார்களினிதிட்ட
பச்சிலையுவந்தருள் பவாநிநகர்வைகும்
பிசசனையடைந்துகதி பெற்றிடநினைந்தான். (கஅ)

ஆய்ந்தமறையாளர்சில ரோமேடர்சாபந்
தோய்ந்தசிலையைசசிலர் சுவற்சுமையவாக்கி
வாயந்திடுகுடுப்பமொடவ் வண்புறவநீங்கிப்
பாய்ந்திடுமெய்யன்பினொடு தென்றிசைபடர்ந்தான். (கக)

நாடுநகரும்பரு நகங்களுநறும்பூங்
காடுநதியும்பல கடந்துமணிமன்று
ளாடுமமலன்றல மனைத்தையுமிறைஞ்சி
யீடுபயில்சேரனுறை யெல்லையினையுற்றான். (உ0)

(வேறு.)

வல்லையிற்சிவ வடிவமாம்வதரிகாவனத்தி
னெல்லையைத்தனி யடுத்திடவடுத்திடவெடுத்த

ல்லுருப்பொறை நெட்டியின்பொறையெனக்காண
ல்லறீர்ந்தமெய் யந்தணனதிசயித்தடைந்தான். (உ௧)

காலமாழிகைகிளர்களுங் கோபுரப்பொலிவு
மலைவானவரிறைஞ்சிடு விமானமுஞ்சுருதி
லுமோர்ந்தரு ணயந்தவர்நடாத்திடுமோம
லைமாலையுந்தெரிந்திட வடிக்கடிதாழ்ந்தான். (உஉ)

சிரேறுங்கிடு மங்கலமுரசமுங்கற்போ
ாருநான்மறை யோதையுமும்பர்வாய்த்துதியும்
ருளோர்தொழு முழக்கமுங்காவிரிபவானி
ரவாரமுஞ்செவித்தலம் பருகினனணைந்தான். (உ௩)

ன்றுதெக்கண வளகையிற்புகுந்தனன்செம்பொற்
ன்றமன்னதோர் கோபுரம்பணிந்துபோய்க்குறைதீர்
ான்றுமங்கக ரந்தணர்தம்மொடுமொல்லைப்
ான்றருந்திரிவேணிசங் கமக்கரைபுக்கான். (உ௪)

துதானன்முன்புணர்த்திய கன்னெறிவழாமற்
துநீர்மையிற் சங்கற்பநெறியொடும்வேத
லசுந்தரிபாகனை யுன்னிகின்மலமாங்
ரவ்வானதிதனையொடும் விதிமுறைகுடைந்தான். (உ௫)

டைந்துதற்பணமுனிவர்க்குங் குரவர்க்குந்தென்பா
டைந்துளோர்கட்கு மமரர்க்குமன்பிறைஞ்சியற்றி
டைந்தசைவவேதியர்முத லனைவர்க்கும்வெறுக்கை
டர்க்குநல்கிகன்னியதிக மெனமுடித்து. (உ௬)

சாபவன்கலைத்தக்கவர் கரந்தழீஇப்பதும
காபனுன்முகனயந்துநன் மலர்கடேய்ப்பரவு
நூபுரத்திருத்தாளனை நுவலரும்பவாரி
மர்புரத்துறைமறைக்கொடி மணாளனையுள்கி. (உஎ)

மந்திரங்களிலுயர்ந்த பஞ்சாக்கரமறைவாய்ச்
சிந்தையுட்பலவுருவுற வுண்மையிற்செவித்திட்
டிந்தவெஞ்சிலைமுன்னுருப் பெறுகவென்றீண்டி
யந்தணாளரப்புனலிடை மும்முறையாட்ட. (உஅ)

இட்டவேதியன்சாபமங் கிளஞ்சிறுநாகஞ்
சட்டைவிட்டல்போற் கழன்றதுவேதகந்தாக்கப்
பட்டவல்லிரும்புருவுபோய்ப் பைம்பொனனதுபோற்
சட்டகத்தொடுந்தோன்றினன் றருமசன்மாவே. (உகூ)

வந்துதாதையையன்னையை மருங்கெலாநிறைந்த
வந்தணாளரைத்தாழ்தலு மரவெனுமோதை
பிந்திராதியர்செவிகளிற் புகவெடுத்திறைத்தார்
கந்தவார்சிலைக் கற்பகப்பூந்தருமாரி. (௩௦)

சாதநன்னெறித்தருமசன் மாமறைமுழங்க
வேதநாயகிபாகனை விதிமுறைபூசித்
தேதநீங்கியங்கப்பிர தக்கணமியற்றி
மாதவன்புகலறநெறி வழாதெலாமுடித்தான். (௩க)

ஏச்சமங்கிருந்திருமையா லீசனுக்கியற்றி
பிச்சலுந்திரிகாலமு நிமலனைப்பூசித்

இச்சையுள்ளனயாவையு மிலக்கைநீழலின்வாழ்
பிச்சனுன்மறைப் பிராட்டிநாயகன்றாய்ப்பெற்றான். (௩௨)

சங்கமத்துறைபடிந்துயர் தனிப்பெருஞ்சுருதி
மங்கைபாகனைவரன்முறை பூசித்துநெடுநாட்
டங்கியெம்பிரானருள்தரத் தந்தைதாயொடும்போ
யங்கத்தேயத்தையடைந்தனனருந்தவமறையோன். (௩௩)

அருமகம்புரிந்தறம்பல செய்தரனருளாற்
றருமசன்மனுககருமணமுடித்தருந்தவஞ்செய
தொருமையன்புறவாழ்ந்தபின் னிறுதியினுமைகோ
னிருமலர்ப்பதஞ்சார்ந்தன னெக்கியசன்மன். (௩௪)

தாதைநற்கதியடைந்தபின் றவலருங்குணத்தோன்
போதநாடொறுமளப்பரும் போகங்கடுய்த்து
மாதவத்தனுய்த் தருமசன்மாவெனுமறையோன்
வேதநாயகிநாயகன் வியன்பதமடைந்தான். (௩௫)

சிதையுமன்புளோர் திரிகரணங்களிற்சேர்ந்த
துதைதருங்கொடும் பவமெலாந்தாயநுண்பஞ்சு
கொதிதருந்தழற்பட்டபோற் குலைந்திடமிர்த
வதரியந்திருவைப்பிடை யொருபகல்வதியின். (௩௬)

நித்தமாயொளிர்நிருமலப் படிவமாய்நிரம்பு
சுத்தமாய்நிகழ்சுருதியின் சொரூபமாய்க்கதிக்கோா
வித்துமாயந்தமாதலம் விளங்கலால்விமல
வுத்தமத்திருவதரிகீழலை விடாதுறைந்தான். (௩௭)

சிந்தைவேட்டனவனைத்தையு மிம்மையிற்சிறப்பா
லெந்தையார்தரத்துய்த்தபின் முத்தியெய்திவோர். (௪௩)

சுருதியின்படித்தாந்திரு வதரியைச்சூழ்ந்து
பருதிமாலையன்புரந்தரன் பன்னிருசுடரோ
ருரைதருஞ்சனகாதிய ருருத்திரர்வசுக்கள்
வரைதரும்புகழ் மேருவையாதியமலைகள். (௪௪)

கங்கையாதியகடவுண்மா நதிகணற்கதிக்கா
யங்கடைந்தருளுண்மையி னமலமாம்பொருட்டாற்
றங்கிதியம்வதிதலாற் றனித்தனிவிரித்து
துங்களுக்கியானுணர்த்துமா றெவன்மறைநுவன்றீர். (௪௫)

மாகரிந்நகர்மகிமையை யுணர்த்தபின்றங்கள்
போகபூமியைமறந்தன ரலகடற்புவிவாயப்
பேகஞகியபெருந்திறற் காதிசேயபிரம
யோகியாலதவ் வுத்தமதலத்திஞலன்றே. (௪௬)

அருமைமிக்கவிம்மாதல மகிமையுமன்பிற்
பெருமையும்பெரிதாதலாற் பிறங்குநூற்கேள்வித
தருமசன்மனச்சாபதீத் தருக்கதிசார்ந்தல்
கிருமையெய்தினு னென்றனனிருடிடர்கோமான். (௪௭)

## ஒன்பதாவது தருமசன்மன்கதிபெற்றசருக்கம் முற்றிற்று.

ஆகச்சருக்கம் கூ-க்கு விருத்தம்-(ருOச)





சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

பத்தாவது

# விசுவாமித்திரன்.

## பிரமவிருடியான சருக்கம்.

தாதிவர்நறும்பூந் தடங்தொறுமலர்ந்த தாமரைப்பொகுட்டிடைத்தணவா, தோதிமச்சேவல் பெடையொடுங்தேற லுண்டினிதுறைந்துகண்வளரு, மூதெயிலுடுத்த வளம்பொலிபவாகி முதுநகரடைந்துநோற்றினிது, காதிசேய்பிரம விருடியாயுயர்ந்த காதையைவிரித்தினிப்புகல்வாம். (க)

அவிர்தருபோதச் சவுனகராதி யருந்தவர் சூதனைமீட்டும் புவிதனிலிறைமை பூண்டகோசிகனப் புனிதமாதலத்தடைந்தருளா, லிவாருந்தவஞ்செய் தலகெலாம்பிரம விருடியென்றியம்பிடப்பெற்ற, தவலருஞ்சிறப்பை யுரைத்தியென்றிசைப்பமுனிவான்மகிழ்ச்சியிற்சாற்றும். (உ)

கத்திகைநறும்பூங்குழன்மடமகளிர் கவரிகளிருபுடையிரட்டமத்தமானெருத்தம் பொலிக்தொருகுடைக்கீழ் மாநிலமுழுவதும்புரக்கும், கொத்தலரலங்கன் மன்னர்தங்குலத்துக் கோ

சிகன்கோதகல்செங்கோ, லுத்தமநெறியான் மனுமுறைநடாத்தி யுலகரசியற்றுமந்நாளின். (௩)

தன்னுழையவராற் கள்வராற்றன்றாற் றரியலரா லமறவிலங்கா, லின்னலோரணுவுமிடையுறுவண்ணமினிதுகாததிருகிலமபுரக்கு,மன்னனோறகுய கோசிகனொருநாள்விலங்கடுவேட்டைமேன்மனனுய்க், கொன்னுனைவேற்கைப் படைகசூழாததேர்மிசை குறுகினனொருவனச்சாரயில. (௪)

தள்ளரும்பணிக்கை மும்மதமால்வாய்த்த தழற்சிறுதறுகணாமால்வேழ,முள்ளருங்கவன வாம்பரிபுலிப்போத் துறழ்சினததிறலுடைக்கழற்கான், மள்ளர்களொடும்போய் வெய்யபிறைகோட்டால் வாவிநாற்கிதைந்ததேனருவி, வெள்ளமாயோடுமொருமலைச்சார்பின் மேவிமாவேட்டையாடினனால். (௫)

சல்லரிதுவைப்ப முருகியங்கறங்கச் சாபவன்கொலைஞர்கள்குரவை, செல்லெனமுழங்க வடுகொலைமிருகத் திரள்பலபடுத்துபோற்செல்லு, மெல்லவன்கரங்கண் முறைகடைச்சிலபோ தெழிற்றருநீழல்வாய்வைகி, யல்லறிர்க்தவப்பி ரூனகளொடும்வசிட்டனாச்சிரமத்தையடைந்தான். (௬)

தளப்பெருங்கடலோ டணைந்தகோசிகனைத் தாயருமகவினைக்கண்டாங், குளப்பருங்களியா னெக்கமாதவர்க்கு ளுத்தமவுசிட்டன்மாமுகம, னளப்பிலவளிப்ப ,வணங்கினன விடைதந்தருளெனப்பசிக்கியா முதவல்,களிப்பொடுமெருந்தி யேகுதல்கடனென் றுணர்த்திடக்கவுசிகன்புகல்வான். (௭)

அருந்துதல்வாழ்த லனைத்துநின்னதுவே யல்லதுபிறிதிலையுன்னில், பெருந்திறற்றுனையிருந்தலாலெமக்குன்பேருளொ

ன்றுமேசாலு, மருந்தவத்துயர்ந்தோ னென்னலுங்கைகூர்ந்தும
லடிந்தமலனைப்பூசித், திருந்தமுதருந்தி யேகலாமென்ன வியம
மம்முனிருடியர்பெருமான். (அ)

போதமிக்குயர்ந்தோ னருள்செயக்கேட்ட புலன்றெரிய
மைச்சாகருயர்ந்தோர், மூதுரைகடக்க லறனலவெனு முக
மலர்மதிலைசாதனனாகி, நீதியிற்றொருப்பட் டேகினன்றனது கியதி
கணைறிமுறைமுடித்தான், மாதவன்காம தேனுவையழைத்து
வேணவெவ்வழங்கென வகுத்தான். (கூ)

வந்தநாற்படைக்கு மந்திரத்தவர்க்கு மாசனம்வகைவகைதி
ருத்தி,யிருவிராசியர்க்கு மெய்தொறுவமுதி னின்சுவைப்போ
னகவருக்கங், கந்தமார்பலங்கள் முதலியவமைத்துக காததினிதி
ருத்தியமெல்லே, விந்தைசேர்விசுவா மித்திரனென்னும் வேட
தனுங்குவப்பொடுமெய்தா. (௰)

மறுவறுதவத்தோன் முகமனுற்பந்தி வரிசையாலாசனத்திரு
த்தி, யறுசுவையுணடிக் கமைதணவிளைத்துங் கடவுளானவித
திடப்பெபது, நறியநெய்தயிர்பால் தீஞ்சுவைப்பலன்க ளாதிய
கனிவுறப்படைப்ப, வெறிகமழ்தாரான் சுராமுதருந்து மேன்
மையின் விருந்துசெய்தனனால். (கக)

தாககமிலிமையோர் மாதவனளித்த தூயதெள்ளாரமுதுண்
டு, தேக்கிடல்போலச் சேனையும்பூகச் செல்வருந்திறல்கெழு
வேந்தும், தாக்கரும்பசிதீர்ந் திகபரமுணர்ந்த தாபதற்புகழ்ந்த
லுந்தகவால், பூக்கமழ்கந்த மாடையொற்கலந்தாம் பூஸ்மும்வரி
சையிலுதவா. (கஉ)

இன்னணம்வேட்ட வனைத்தையுமிமையோ ரொழிநகர்ச்சு ரபியீந்திடலு, மன்னவன்காணூ வதிசயமடைந்திம் மாதவவசி ட்டன்மாட்டிருந்த, பொன்னவிர்சுரபி யிருநிலமுழுதும் புரந்த ரனுலகமுமடையி, னுன்னினவனைத்து முதவுமற்றிதனுக கொ ப்பதொன்றிலையெனநினைந்தான். (கங)

காந்தனிலவிரு மாழியங்கமலக் கண்ணினன்கதிர்மணிமா ர்பி, னிருந்தவளிந்த வுருவெடுத்திருடிக் கியற்றியபணிகொ லோவீசன், பெருந்திருவருளோ மாதிரவலியோ யாதெனப் பேசுகேனிந்த, வருந்தவன்செய்த தவவலிகேற்றம் யாதெ னவதிசயமடைந்தான். (கச)

நிவப்புறுசெம்பொன் மேருவுங்குபேர னிதியமுநெடுங்கடல் சூழ்ந்த, புவிப்பொறையேந்து புயநகர்கோன்றிருவும் புரந்த ராதியர்பெருவாழ்வு, மூவப்பொடுங்காம மாதியவிடையமொ று ததுமிக்கொளிவிடநோற்குந், தவப்பெருவலிக்கோ ரணு வெனநினைந்து தன்னரசாற்றலைவெறுத்தான். (கரு)

இவ்வணநினைந்த கருத்தினனுகி யிருடியைப்பார்த்தினிது யர்ந்த, செவ்வியோயுனது தவப்பெருவலியாற் செகத்திரன் முழுவதுமங்கைத், திவ்வியாமலகக் கனியெனக்கண்டா யுன க்கரிதொன்றிலைத்தெரியிற், குவ்வினைப்புரக்குங் கொள்கை யாலெமக்கிக கோவினைநல்குதியென்றான். (கசு)

சுவையுலகனிகருந் தோன்றலீங்குரைப்பக் கேட்டருள்தூய வன்சுரபி, நமதலவனித்தற் கரசநீயழைத்தால் னண்ணுமே ற்கொண்டுசெல்கென்ன, வளமையொடுமுன்னர் வருகதிகாம

ழைக்க வணைத்ததாலன்னதென்றுரைப்ப, யிமையவரானைத்
தூதர்நீருபாயத் தெம்முழைத்தருகிரன் றிசைத்தான்.(௧௭)

கணங்கொடுசென்ற காளையரசன் கட்டுரைதலைக்கொடு
சென்று, குணங்களாற்கொணரார் குணங்களாற்பிணிப்பப்
பொடிபடக்கோட்டினுற்சிதைத்துத், தணந்துயர்தவத்து வசி
ட்டன்மாட்டெய்தித் தாழ்ந்தியான்பிழைத்தவாறென்கொன்
மணந்தருமடிகட் கென்னமுன்வணங்கி வாய்மையாலினிதிசை
த்திடுமால். (௧௮)

நின்மனதுவக்க வளித்ததோவன்றி நிருபர்கோனெனைமன
ச்சி, வன்மையிற்பற்றித் தன்னகர்செல்வான் மதித்ததோ
ராற்றெனவுயர்ந்த, சன்மதியுளைநான் றவிலைநிரையுன் றன்
னதென்றலுந் தடைநீர்ந், தென்மணிகுயிற்றுந் தன்னமரிரு
க்கைக் கேகுதற்கெழுந்திடுமெல்லை. (௧௯)

சற்றுறுசினத்தாற் றுனையைநோக்கித் தாரதிபனம்முழைவி
ரைந்து, பற்றுதிர்தருதிர் பசுவினையென்னப் படைக்குழாமொ
ல்லைபோய்வளைந்து, சுற்றலுந்தெய்வச் சுரபிவெஞ்சீற்றஞ்
சொலித்துடன்மயிர்த்துளைதோறுந், தெற்றெனப்பலர்களுதி
த்திடவினைப்பச் செனித்தனர்திறல்கெழுவீரர். (௨0)

படைக்கலந்தாங்கி யுதித்தவரந்தப் பார்த்திபன்றனைமேற்
பாய்ந்து, முடுக்கிவெஞ்சீற்றம் விளைத்தலும்வேந்தன் முனைப்
படைமுரிந்துபோய்ப்பைம்புல், விடைக்கிடைப்பற்ற கோக்கிய
கவுசி கேந்திரன்வெள்கியாமெழில்சேர், குடைக்குலமன்னர்
குலத்திடைவந்து மென்செயவென்றுளங் குறித்தான். (௨௧)

வேறு.

காய்தியதானைகள் வெங்கிடல்கண்டரு ளிகல்வேலான்
மைதவிர்மந்திரர் தமைகளைநோக்கியிம் மகியாவும்
மெய்தகவாளுகி மூம்பலமொன்றிலை மேலாகச
செய்தவமேபெரி தாயுளதென்றுரை செயதானால். (௨௨)

நீட்டியசெங்கதிர் சூழவிருந்த நிலப்பார
மாட்டுமைமந்திரர் மீதுசுமத்தி வளங்தேங்கு
காட்டின்விடுத்தினி நான்மறையோனென நனியோக
மீட்டுவனென்று நடந்தனனல்வினை யிசைவாலே. (௨௩)

மன்றல்செறிந்து விளங்கிவளங்கெழு மாமேருக்
குன்றமடைந்தவர் தண்டலைதுன்றிய குணபாலிற்
சென்றனன்வன்னி கறுந்தருநீழல் சிறந்தங்க
ணென்றினன்வைகி யிருந்துதவத்தி னொருப்பட்டான். (௨௪)

மிககமனப்புல மூடியவிந்திய வெங்காளை
யக்கரமைந்தெனும் வாழ்கொடகற்றிமெய் யருண்ஞானத்
தொக்கமெய்வித்தினை வித்தியருட் சோருபானந்த
மிக்கபலன்செய் தருந்தவயோகம் விளைத்தானால். (௨௫)

ஓடியவெம்பரி மாவைநிறுத்துறி னுள்ளாகக
கோடியவெங்கடு வாளம்வலித்திடு குணமேபோ
னீடிவிரிந்த மனத்தைநிறுத்த நிவங்தோடு
மீடுளவாயுவை யீர்த்தசைவின்றி யிருந்தானால். (௨௬)

(வேறு)

மயர்வறவுயர்ந்தவேதம் வகுத்தவட் டாங்கயோக
மியமநன்னியமமீறி லாசனம் பிராணயாம

முயர்பிரத்தியாகாரந்தா ரணையுரைப் பருந்தியானந்
தயையுளசமாதியென்னச் சாற்றுமிவ்வியோகமெட்டின். (௨௭)
விரிந்துளவுயிர்கொல்லாமை மெய்மைகள்ளாமையன்பி
னொருங்குமிந்தியமடக்க லொருவர்பாலேற்றிடாமை
பரிந்துளவியமமாகும் பன்னருமறைக்கேர்த
னிரம்பியமகிழ்ச்சிபூசை சவுசநன்னியமமாமால். (௨௮)
ஊருவிற்றாள்கண்மாறி யேற்றிமாலொழிந்திருத்தல்
சீருறவோங்குபத்மாசனமெனத் தெரிப்பரிந்த
வேர்கெழுதவிசின்யாக்கை யெய்தியவழிபிராண
னேருறங்கூறுதறன்னைப் பிராணாயமென்பர்நூலோர். (௨௯)
தாங்கருஞ்செபதோடாற்றல் சகற்பமாந்தனிசெபத்தை
நீங்கியபிராணாயாமங் கற்பமாங்களாங்காரத்
தோங்கிநின்றுயர்ந்தகாயத் திரியினையுதித்துமீது
தேங்கிடமுக்கால்கன்கிற் செபித்தலும்பிராணாயாமம். (௩௦)
வீண்டரேசகங்கன்மூச்சை விடுத்தல்பூரகமேற்றல்
கொண்டுளேநிறுத்தல்தன்னைக் கும்பகமாகுமென்பர்
திண்டிறல்விடையூர்ந்தனனி லிந்தியஞ்செலர்தடக்க
லெண்டருமறைகள்வல்லோர் பிரத்தியாகாரமென்பார். (௩௧)
திறனுறவிதையமுச்சி யுந்தியிற்சித்தந்தன்னை
நிறுவல்தாரணையதாகு நிமலமாய்நிறைந்தமுக்கட்
கறைமிடற்றவனைக்கால காலனைக்கருத்துளூன்றித்
திறனுறவேறென்றெண்ணு திருத்துதல்தியானமாகும். (௩௨)
புறம்பினுமுள்ளுமெங்கும் பூரணமாகிநின்ற
திறம்பெறுபிரமந்தன்னைத் தெரிவுறவெங்குநோக்கல்

சிறந்திடுஞ்சமாதியாமென் றுணர்த்துவர்சிவாகமாதி
யறிந்தவரிந்தவோரொட் டங்கமாயோகமெல்லாம்.          (௩௩)

வீக்குமாசனத்தின் வைகி மேதகவிழிகடன்னை
மூக்கினன் னுனியினட்டி மாயையைமுறுக்கிஞானத்
தேக்கிமிக்குயர்ந்தகாயத் திரியுணிச்சிவசொரூப
நோக்கியாயிரப்பத்தாண்டு நவலரும்யோகஞ்செய்தான். (௩௪)

வாயுவுங்கந்தமூல வனமுநீர்ச்சலமுமாகி
யாயிரப்பத்தாண்டெல்லை யருந்தவமுயன்றபின்னர்த்
தீயினுனருக்குஞ்செம்பொற் றேகமோடெழுந்துசென்று
மாயிரும்பிரமயோகி யாயினம்வசிட்டவென்று.          (௩௫)

என்றலும்பிரமயோகி யின்னநீயல்லையென்று
வன்றவனுரைப்பவுள்ளத் தடக்கியசீற்றத்தோடுஞ்
சென்றனனுயர்ந்தஞானத் திருமறைகாட்டினண்ணி
நின்றதோர்வன்னித்தாரு நீழல்வாயிருந்துநோற்றான்.          (௩௬)

பன்னருஞ்சிரத்துமீது பன்னிரங்குலிக்குமப்பா
னன்னர்சேர்மூலந்தன்னின் ஞானநாளத்துமீதே
யின்னனுவாதியாமெட் டிதழொளிருஞ்சித்துரூப
மன்னியபொருட்டிருப்பண் வயங்கியதொன்றேதன்னில.

ஆயிரமிபரப்பினூறு யிரங்கதிரவிர்தல்போலப்
பேரொளிவிளங்குமென்று குடிலையேபேசுகின்ற
வோரொளிதன்னைமாறு தன்னினின்றிலக்கமாண்டு
சீருறஞானச்சாவித் திரியுணித்தவஞ்செய்தானல்.          (௩௭)

இவ்வணமிமையோரஞ்ச விருந்தருந்தவஞ்செய்தேகிச்
செவ்வணவசிட்டன்பாற்சென் றருந்தவந்திருந்தநோற்றியா
மெவ்வமற்றுயர்ந்ததூய பிரமமாவிருடியானே
மொவ்வுதியென்னலோடு முறைசெய்வான்வசிட்டன்மீட்டும்.

திரமுறுதவங்கள்பன்னாட் செய்ததாற்றவசியாகி
யுரனுறவிளங்காநின்றாயென்ன லுமுவக்கானின்னும்
பிரமமாவிருடியென்று பேசிலனெனவுள்ளெண்ணி
யிருமடங்கின்னநோற்போமென்றுன்னியெழுந்துபோனான்.()

எல்லையில்லைசயவெற்பை யெய்தினனெய்தியாங்கோர்
செல்லியந்தாருநீழனெடிதிருந் தருநூல்சொன்ன
நல்லவாறொழுகிசாவித் திரியுன்னிநாளுநோற்று
வல்லவீரைந்திலக்கம் வருடமும்யோகஞ்செய்தான். (௪௧)

தடம்படுமுலகினுள்ள சராசரமனைத்துமெல்ல
நடுங்கிடநாகநாட்டோர் நாட்டமுஞ்செவியுமூடக்
குடைந்ததோரோனைதனேனைக் குரவனையாதிவானோ
ரடைந்தனர்சையவெற்பி லருந்தவத்துயர்ந்தோன்பாங்கர். ()

ஐயநின்றனைப்போனோற்றார் யாவர்கொல்குருரமாய்நீ
செய்தவம்பெரிதுமிக்காய்ச் சிறந்திடும்பிரமயோக
மெய்நிலையினியிப்பூவி னேற்றமாம்பவாங்கூடற்
றுய்யமாதலத்துநீபோய்த் துன்னுதியென்றுபோனார். (௪௩)

வேதியனதிவானோர் வியந்துமுன்விளம்பிப்போந்த
நீதகல்விசுவாமித்திரன் சிவனுருப்பெற்றுங்குப்

போதல்போலெழுந்து தெய்வப்பொன்னியிற்பவாநிகூடு
மாதலத்தடைந்துசங்க மாதிநீர்விதியினாடி. (௪௪)

சிவவடிவாயகாயத திரிசிலையிடத்தும்ஞானத்
தவமருள்சங்கமேசர் சன்னிதானத்துமேலா
புவமையில்வேதக்குன்றத் துச்சியுமிருந்துபன்னா
ளுவலருங்கந்தமூல நுகர்ந்துமாதவத்தைதோற்றான். (௪௫)

முன்னருந்தவஞ்செய்தார்க்கு மும்மடங்கதிகமாமிப்
பொன்னகரிடத்துநூறு புண்ணியப்புத்தேழாண்டு
மன்னிமெய்வருந்திநோற்கு மாட்சியாலுலகமெல்லாம்
வன்னிபோலெழுந்தன்னோன்செய் மாதவந்தகித்ததன்றே. ()

இந்திரனாதிவானோ ரிதையமாநடுக்கத்தோடும்
வந்தனர்வசிட்டன்றன்பால் வழுத்தினர்வழுத்துங்காலை
யந்தணன்முனிபாலெய்தி யருந்தவபிரமயோகி
யிந்தமாதலத்தில்லானா யினியுனைக்கொப்பார்யாரே. (௪௭)

புரிதனிலுயர்ந்தவிந்தப் புண்ணியநகரின்வந்து
பெரிதுநீநோற்றலாலே பிரமமாவிருடியானா
யரிதுனக்கினிவேறில்லை யருண்மிகுங்கடவுளானை
வருதியென்றழைக்குமுன்னே வந்துமுன்னேவல்செய்யும்(௪௮)

என்றெதிர்வசிட்டன்கூற விகலறுபிரமயோகத்
தொன்றினமுனிவன்போத வுவகையின்மலர்ந்தகாலைத்
துன்றியமுனிவராதி சுரரெலாம்புகழ்தல்செய்தார்
வென்றிமாதவஞ்செய்வோர்கண் மகிமையைவிளம்பலாமோ.

விப்பிரவிருடியான மேன்மையோன் பவாநிகூடன்
முப்புரங்கடந்தவான முதல்வனை மூன்றுபோதுஞ்

செபமிகுடர்ந்தபூசை திருத்தியத் தெய்வஞான
வைப்பிடைவதிந்தானந்த மகிமையார் வழுத்தவல்லார். (ருo)

ஆதலாற்பிரமயோக மருந்தவன் றனக்குநல்கு
மாதலமகிமையாக்கும் வழுத்திடற் கரிதங்கேய்தி
யாதொருபுருடனேனு மருமறைச்சிலம்பினேற்கிற்
றீதகலசரீரத்தோடுந் தேவனாய்விளங்கறிண்ணம். (ருக)

ஏதுகளார்புகழுங்காயத் திரிசிலையிருந்துள் ளன்பாற்
றீதறுச்சுசியாற்காயத் திரியிலோர் செபஞ்செய்தாலுஞ்
சதுமனறூதியடைத் தான்செய்தபலன்வந்தெய்தும
டதிகருமவந்துகாலையிற் பாவனராவரன்றே. (ருஉ)

சிவவடிவானகாயத் திரிசிலையிடத்தியாரேனு
முவமையின்றுயர்ந்தவட்டோத் திரசதத்திரதையுன்னிற்
புவியிடைமறைத்தானம் புக்கிமெய்யன்பிற்கோடி
திவியமாயிருந்தகாயத் திரிசெபித்ததுபோலாக்கும. (ருங)

விதியினாற்செபித்திட்டாலும் விதியின்றிச்செபித்திட்டாலு
மதிகமாம்பலமேயல்லா லற்பமாம்பலமுறாதா
லிதமை நுவன்றவுண்மை யென்றினியுணர்வீரிந்த
முதுங்கர்ப்பிறவிக்கானே முறுக்கடுஞ் செந்தீயாமால். (ருச)
தெள்ளியவிசுவாமித் திரச்சிவயோகியங்க
ணுள்ளருந்தவங்களாற்றி யிருடிடற்கிறையாய்முக்கண்
வள்ளலைப்பரவிப்பன்னாள் வதிந்துபின்வடபான்மேரு
வொள்ளொளியடுக்கல்சார்ந்தங் குவப்பெதும்மையினனல்

பதிகளிற் றிலகமாமிப் பவானியம்பதியைப்போல
வதிசயம்பயக்குந்தான மகலிடத்துளதோவிந்த
முதுதவன்பிரமயோகி யாகியமுறைமைசொற்ற
கதைபவுடியத்திலென்று கழறினன்கருணைச்சூதன். (௫௬)

## பத்தாவது விசுவாமித்திரன் பிரமவிருடியான சருக்கம் முற்றியது.

ஆகச்சருக்கம். ௧௦ - க்கு விருத்தம். (௫௫௭.)

திருச்சிற்றம்பலம்







சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## பதினோராவது

# தந்துவர்த்தனன்வரம்பெற்ற

## சருக்கம்.

---

இன்னணம்விசுவா மித்திரன்பிரம விருடியாயினசெயலீதிப் பொன்னகரிடத்துத் தந்துவர்த்தனனும் புரவலன்போந்தருட்சுருதி, மின்னொருபாக நாயகனருளால் வேண்டியவரம்பெரிதடைந்து, தன்னிகர்பிறிதில் கதியினையடைந்த தன்மையையெடுத்தினிதுரைப்பாம். (௧)

நுணங்கியகேள்விச் * சவுனகர்கேட்க நுவலுவான்றெரிவருநண்காற், பணந்திகழ்பாந்தட் பஃறலைக்கிடந்த பாரிடைப்பவானியம்பதியின், மணங்கமழ்வதரி மூலநாயகனை வணங்குவோர்மிருத்துவைச்சயஞ்செய்,திணங்குமெஞ்ஞானச் செல்வராய்வீட்டி லிருப்பதற்கையமொன்றிலையே. (௨)

யாதொருகரும முற்றிடவேண்டி லக்நகரடைந்தருள்வடிவாம், வேதமங்கலைபங் காளனைப்பரவி வேண்டிடினெளிதினெய்திடும், மாதலமதனி னிரவிதன்குலத்து மன்னவனொரு

வன்முன்வந்து, மேதகவேட்ட பொருளெலாமடைந்து வியந்தபின் விமலவீடடைந்தான். (௩)

என்னுமன்னோன் செய்கையைவிரித்தீண் டியம்புதியெமனுஞ்சூதன், புன்னுமின்னுமிழு மணிமுடிவேந்தா பாவுறந்திறல்கெழுகழற்காற், பொன்னியந்துறைவள மாயினியுதித்த புண்ணியன்புரந்தரன்போல்வான, றன்னிகரில்லா மாண பினுன்றகைசால் தந்துவர்த்தனனெனுந்தகோன. (௪)

தீமையுங்கொடிய பொய்மையுமொதுக்கித தெண்கடலுடுத்தபார்முழுதும், வாய்மையும்புகழுந் தருமமுந் தவமும வண்மையுமானமும் பொறையுந், தாமகவளிக்கு தன்மைபோல வளர்க்குந் தகைமையான் றரியலரென்னும், பாய்மதவேழத திரள்களைச்சாடும் படர்சினகோளரிபோல்வான். (௫)

திருமகள்முகமுங் கலைமகணாவுஞ் செயமகள்புயங்களுந்திடமாம்,பெருமகள்மனமும பிறங்குசந்தானப் பேரணங்குதாமுமென்மேற்,றருமகள்கரமுஞ் செருமகளுருந தயங்குசௌபாகயமின்மார்பு, மருளமயிலுவந்து வீற்றினிதிருப்பப் பெறறனருந்தவப் பலத்தால். (௬)

அறத்தவிசுறையு மருந்தவத்தோற்கு மந்தணர்தமக்கு மெய்பன்பா, லுறைத்தபேருணர்வி னொருப்டபெருதத லுயர்நவபுண்ணியச்சார்பின், றிறந்துநின்றொழுகு நீர்மையானுதி சேடனுயிரஞ்சிரந்தானிற், பொறுத்தபார்ச்சுமையை யாற்றிமனனுனையைப் புரிந்தரசியற்றுமகாரளின் (௭)

சொலற்கருமறைநூ லொருங்குணர்ந்துயர்ந்த தூபவனரெல்யாத்துவரச, குலத்தினிலுதித்தோன் றீர்த்தயாத்திரை

செய் கோதிலான்சைவவாகமநூல், கலைத்திரளுணர்ந்து தெளிந்துளோன்சநக னன்னனென்போன்கம்பசியான், மலைப்புயன்றந்துவாத்தனசசோழ மன்னவன்மருங்குவந் தடைந்தான்.

குடைபயில்கரமுய குளிர்மதிமுகமுங் கோதிலாத்திருவெண்ணீற்றழகும், விடையவன்படிவக் கண்டிகைபூண்டு விளங்குமுன்னூன் மணிமார்பு, முடையதொல்படிவி னெதிர்வரக்கண்ட வொண்முடிவேந்தர்கோனெழுந்து, முடிமிசைச்செங்கை குவித்தெதிர்வணங்கி முறைமையாலுபசரித்தனனால். (௧)

தம்பதியொடுமத் தாபதமறையோன்றண்மலர்விளக்கியப்புனலை, யும்பருமியக்கும புனலெனப்புறமுமுள்ளுமாற்சுத்திசெய்திறைஞ்சி, யம்பொன்னாசனத்தி னிருத்தலுமிருந்த வந்தணனை நோக்கி, நம்பியவறனு மைந்தரும்வளமும் நன்மையோவென நனிவினவா. (௧௦)

முகமலர்ந்தையன் வினவுதல்கேளா முகிழ்த்தசெங்கையினுன்வேதச், சிகையுணருராவோய் நின்னருணலத்தாற் சிறப்பொடரசுசெய்திருந்தே, னகமதின் வேறு குறைபிறிதிலைச்சந் தானமொன்றருந்தனுப்பற்றுன், மகவளித்திடுத லறிகிலாதைய மைந்தனில்வாழ்வுளேனென்னா. (௧௧)

தானமாகாயஞ் சலதாந்திமிரஞ் சசிமடந்தையர்குணஞ்சாந்தநாகணிகவன மந்திரஞ்சுபமா மங்கலஞ்சொற்பிரசங்கம் பானியவோடை துறைகளையஞ்சம் பகர்சபையருந்தமிழ்வாணர், பூமிறைபுகழ்நற் கொடைகுலமேலாம் புதல்வருல்விளங்குமென்றே. (௧௨)

ஆதலாறுதி நூலொருங்குணர்ந்த வந்தணவடிடனேனினியு ஞ், பாதநாண்மலர்கண் டிறைஞ்சிய நலத்தான் மைந்தரைப்ப டைத்தவனுனேன், றீதையகன்றே னென்றெடுத்திசைத்துச செங்கரங் குவித்தலுஞ்சிறந்த, வேதியர்தலைவன் சிவனபத மினைந்து வேந்தனைப்பார்த்திவைநவிலும். (கங)

சங்கலைதவமும் பொன்னினன்னுட கேளெனச்சாற்றுவான் றகைசால், கொங்குமண்டலத்திற் காவிரிநதியிற் குளிர்மணி கொளித்திடுபவானி, சங்கமஞ்செய்யு நாப்பணிற்கடவுட் டான மாயொருசிவதலமுண்,டங்கதிற்பரமாற் புதவடிவாகி யவதரித திருந்ததோர்வதரி. (கச)

அலங்குமத்தருவி னீழல்வாய்மறைகட் கனுதியாய்முளைத்தரு ள்பழுத்த, விலிங்கமொன்றருணச் சோதியின்வடிவா யிருந்த தாலிந்திரனயன்மால், துலங்கருட்பராசன் வசிட்டனாதனத் தொன்னகர்தன்னை யெந்நாளும், வலங்கொடுவணங்கி மக ஞ்செய்துபோற்று வதிந்தனர் வேண்டுவவடைந்தார். (கரு)

கருதியவுதவுக் தருக்களேவந்தக் கடவுள்வைப்பிடைநெடுவத ரித, தருவதாய்ப்பணைத்துப் பலங்களுங்கொர்த்துஞ் சாயனசயு மாய்விளக்கிடுமம், மருவலர்வனத்தின் விஞ்சையரியக்கர் வான வர்சித்தர்கண் மறையோ, ரரவநாட்டவர்க ளிருடியர்முனிவ ராதியோர்நீங்கிடமாட்டார். (கசு)

மூதெயிலுடுத்த வச்சிவதான மூவுலகமுந் தொழச்சிறக்கு மாதலினங்குச் சங்கமேச்சுரனை யரியகாயத்திரிசிலையை வேதவுண்கிரியை வதரிமாத்தருவை மெய்மையால்வலஞ்செய்

துதினமுர், தாதவிழ்மலர்சேர் கரைத்திரிவேணி சங்கமப்புனல்
படிதக்கோர். (௧௭)

எண்ணியகருமம் யாதேனுமெளிதி னெய்திமோதலினந்தப்
புண்ணியதலத்தை விரைவினிலடைந்து புரவலசங்கமமாடிக்
கண்ணினுண்மணியாய் விளங்கிடும்வதரி காவனகடவுளைவி
திபா, னுண்ணிறையன்பின் வழிபடுவாயே லுனக்குநற்பொரு
ளுறுமென்றான். (௧௮)

பின்னருமுரைப்பான் பார்த்திபவேதப் பெண்ணொருபாகனை
லடைத்துச் சன்னிதிநின்று வேண்டினவெண்ணித் தாழ்ந்துநூற்
றெட்டதாய்வலஞ்செய், திங்கிலேதிங்க ளளவையுமியற்று மெ
ல்லையினிலங்கையங்கனியொன், றன்னவனருளாற் கிடைத்தி
டுங்கிடைத்தா லரும்பெறன்மகவுனக்குண்டாம். (௧௯)

கிட்டியதெய்வ வதரியங்கனியைக் கிளர்சுடர்மணிமுடியோ
யுன், மட்டவிழ்கூந்தற் கற்புடைமனைவி மலற்கரத்தளித்தவ
ட்கருதநி, யிட்டபின்னைந்தை யருளினன்மகப்பே றெய்துநீயே
கெனவியம்பிச். சிட்டனான்மறையோ னுசிசெய்திறைவன் சிற
ப்பினிதளித்திடப்போனான். (௨௰)

(வேறு)

நூனெறியாள னிவ்வாறுநுவன்று
போனபின்வெய்ய புலிக்கொடியுள்ள
மாணணிவான்முடி மன்னர்பிரானும்
வானவர்கோனின் மகிழ்ச்சிசிறந்தான். (௨௧)

மந்திரர்தம்மொடும் மாமறையாளன்
வந்தருடன்னை வழுத்திமெய்யன்பா
லெந்தைபவானி நகர்க்கினி தெய்தச்
சிந்தையொருப்படு செய்கையனானன். (௨௨)

கங்குலுநண்பக லுங்கடிமன்றல்
பொங்குபவானி புரிதிரிவேணி
சங்கமநாயகனைச் சதுர்வேத
மங்கைமணாளனை வாழ்த்துவதானன். (௨௩)

அங்கமொராறு முணர்ந்தவரன்பாய்
மங்கலவோசை வகுத்தினிதிற்
சங்கமகேத்திரஞ் சாரவெழுந்தா
னெங்குமெழுந்தின் னியங்கள்கறங்க. (௨௪)

வேதியர்மங்கல வாசிவிளைக்க
மாதவர்வந்து வெண்ணீறுவழங்கப்
போதுதியெல்றுயர் புண்ணியர்கூற
வாதுலரின்மை யகன்றினிதோட. (௨௫)

மாமிசைமந்திரர் வந்துவணங்கத்
தேர்மதமாப்பரி சேனைகள்சூழத்
தாமரையான்பயி றண்சடிமார்ப
சேர்மணியான மிவர்ந்துநடந்தான். (௨௬)

முத்தமணிக்கொடை மொய்த்தபதாகை
சுத்தவியங்கலி வைத்திடவானீர்

த்தலையின்புடை சாமரைதிங்கள்
வத்திரமாடட வார்களிரட்ட. (௨௭)

இன்னெறியில்லொடு மெய்தியமன்னர்
மன்னனனீக வளத்தொடெழுந்தே
கன்னிமதிற்கடி மாநகர்நீங்கிச்
செநெறிமேற்றிசை சேரநடந்தான். (௨௮)

தன்றிருநாட்டுள சைவதலங்க
ளொன்றும் விடாது வணங்கியுளன்பாற்
சென்றுதனெல்லை கடந்தனிசேரன்
குன்றடருங்குடகொங்கையடைந்தான். (௨௯)

வண்டுகடத்தலர் வாயுகுதேற
லுண்டுகளிபபொடு செவ்வழியூதக
கொண்டல்படிந்துயர் குன்றின்முழங்கக்
கண்டுமடிப்பன காமருமஞ்ஞை. (௩௦)

தேறல்வழூர்த்தீ கறிக்கொடிசேண்காம்
பேறிநறுந்தரு விற்படர்கிற்கு
மீறிவ்வரைக்க ணிருந்திளிசான
யாறின்முனிக்கற லாம்பல்களூட்டும். (௩௧)

ஓர்பொழுதுங்குளி ருதைபொருமற்
கார்முகிலாகிய போர்வைகவித்துச்
சார்வுளசெம்மணி யைத்தழன்மூட்டி
யேர்பெற்றுகின்ற வடிக்கல்களெல்லாம். (௩௨)

பருப்பதநீடிய பச்சிமகொங்கின்
றிருப்பொலிவைப்படர் செம்பியர்கோமான்
விருப்பொடுநோக்கியிவ் வில்லவன்மேனாட்
டரிப்பொடுசெய்தவ மேதவமென்றான். (௩௩)

இன்னணமெண்ணி மகிழ்ச்சியினெய்தும்
பொன்னனினறுந்துறை வன்புகழ்வேத
மின்னொருபாகன் விளங்கியநண்ணா
வென்னுமரும்பதி யெல்லையையுற்றான். (௩௪)

ஆழிகெழுங்கிரி யாரையுமம்பொற்
சூழிகையுங்கதிர் தோய்மணிமாட
மாழிகையுந்தனி கண்டருண்மன்னன்
வாழியயான மிழிந்துவணங்கி. (௩௫)

(வேறு.)

சங்கசன்னஞ்சதுமனறகருரிசின்முன் சாற்றியதலமிதென்
றங்கைகூப்பிநின் றடிக்கடிதாழ்ந்துசென் றமைச்சர்கள்புடை
சூழப், பொங்குதானையைப் புறத்தினிலிருத்திமெய்ப் பூசுரரொ
திர்தோன்றி, மங்கலஞ்சொல மலரடிவணங்கியம் மாநகரி
டைப்புக்கான். (௩௬)

சிந்துரச்செழுஞ்சுண்ணமும் பொரியும்வெள்ளரிசியுந்திருச்
சாந்தும், கந்தமும்பனி மலர்களுந்தருப்பையுங் கலவையும்வர
ம்பின்றிச், சிந்தியெங்கணுங் கிடந்திடுமந்தணர் திருத்தெருவ
லஞ்செய்தே, வந்துவானவர் நெருங்கிடுங்கோபுர வாயிலைப்ப
ணிந்தானால். (௩௭)

பந்துவர்க்கமும் பாவலர்வர்க்கமும் பரந்திருபுடைசூழத்
தந்திரபெருந் தலைவர்களுடன்வரச் சாமரையுபுடைதுள்ள
மாதிரககலை மறையவராசியின் மங்கலவணிதாங்கித்
நாந்துவர்த்தன மன்னவனன்பொடுஞ் சங்கமக்கரைபுக்கான். ()

அங்கமாறையுஞ் சுருதியோர்நான்கையு மளந்தருண்மறைச்
செல்வா, தங்கள்வாயமனு வழிமுறைசங்கற்பந் தனிப்புகன்ற
ருளவேத, மங்கைபாகனை யுன்னிநற்றுணையொடும் வரன்மு
றைகுடைந்தாடி, யங்குதற்பணு திகண்முதற்கருமங்க ளனைத்து
முற்றியபின்னர். (௩௯)

இப்பிவாய்ப்படுமுறைமணியாதல்போ லிரும்பலம்பெரிதீயு
மொபபினுதநமமறையவர்கதறநெறி யுறும்பொருண்முதற்று
னந், துப்பினீர்துபே ரன்பொடுமருந்தவர் சூழ்வரப்பெருஞ்
சாயகை, செபபுவோரொடுஞ் சென்றுகாயத்திரிசசிலையினைப்
பணிந் தேததி. (௪௰)

அஞ்சலித்தசெங் கையொடுமுருகிய வகத்தொடுமெழுத்தஞ்
சுஞ், சஞ்சரித்திடு நாவொடும்ஞானநீர்ததும்பியவிழியோடு, மூ
ஞ்சரிக்குழல் வேதநாயகிமண வாளன்வைகியசெம்பொன், வி
ஞ்சுமாலையம் புகுந்தனன்மறையொலி வேதியர்குழுவோடும்.

வேதநாயகி பாகனைமாலயன் விபுதருக்கரியானைப், போத
நான்மறை முடிகளுந்தொடர்வரும் புனிதனைப்புரங்கொன்ற
சிதவாணகை விமலனைக்கண்டலுஞ் செங்கனல்மெழுகாகி,
யோதநீரொடு வுருகினன்கரங்குவித் தோவியமெனநின்றான். ()

கடிகையொன்றுசெல் காறுமெய்யானந்தக் கடல்படிந்தெ
ழுந்தான்போற், படியில்வீழ்ந்தனன் பன்முறைபரவினன் ப
ண்ணவர்தமைப்பார்த்தெம், மடிகளுக்கபி டேகமாதியவினை
க் தாற்றுதிரெனத்தூவெண், பொடியணிதருள் புண்ணியர்
திருக்கையாற் பூசனைசிறப்பித்தார். (௪௫)

முன்னியக்கர்கோன் பூசனையியற்றிய முறையினும்பெரிதா
க, மன்னர்மன்னவன் சோடசமுகமனுல் மறைவிதிவழுவாம
லென்னையாளுடை யிறைவனைப்பூசைசெய் திறைஞ்சிவாழ்த்தி
னனெங்கை, தன்னருட்பெரி தடைந்துவேதியரொடுரு சன்
னிதிவலஞ்சார்வான். (௪௬)

பிரதமைத்தின மாதியாய்முப்பது பெறலருந்தினங்காறும்
விரதம்வைத்தொரு நியமமாய்நினைந்தவன் வேதியர்திரள்சூழச்
சரதநான்மறை முழங்கிடத்தூரியந் தனித்தனியெழுந்தார்ப்பத்
தெரிதருங்கதிர் மரபினுன்றிருப்பிர தெக்கணம்வருகின்றான்.

வலஞ்செய்வான்வரும் போதினிற்றெய்வத வதரியந்தருச்
சார்பி, னலங்கொள்பூங்கனி யொன்றெதிர்தோன்றலு நான்
மறைக்கொடிபாகத், திலங்குமீசன தருளெனவிறைஞ்சின
னெடுத்தனனினைப்போற், றுலங்குகண்களி லொத்தினன்மகி
ழ்ந்தனன் சுடர்முடிமிசைவைத்தான். (௪௮)

இன்னபோரு ளதிசயங்காண்டலு மிருமருங்குறுநூலோர்
மன்னனின்றனக் களவிலாப்புகழுடை மைந்தன்வந்துதிப்பா
னென், றன்னவேசர்சொல வணங்கினன்வேண்டுவ வளித்த

னன்களிவெள்ளந், தன்னிலாழ்ந்தனன் வலஞ்செய்துநாயகன் சன்னிதிக்கெதிர்சார்ந்தான். (சஎ)

அருந்திறன்மிக வணங்கினன்றுதித்தனன் னருளடைந்தனனாகிக், கருத்துமுற்றிய பன்னிலைகவதரியங் கனியளித்தனன்பினனாத, திருத்தருதலமனறயவர்க்களவறுசெம்பொனல்கியன் பாயப், புரதநுவேள்விக ளந்திபூசைகண்முதல்யாவையும்புரிந்திட்டான். (சஅ)

இன்னநீர்மையி னட்குநாளன்பின்மிக் கேற்றமாயெழில் வேந்தன் முன்னர்வேதியன் மொழிப்படிநூல்வழிமுறைமை புந்தவிராமற், பன்னிதன்னொடு முப்பதுதினமுமப் பதியிடை வழிபட்டாக, குன்னரும்பணி யுள்ளமுடபுறம்புமொத துன்ற றநாளினிலோர்நாள். (சகூ)

சாலவேதியர் தம்மொடுமருத்தியாற் சங்கமேசனைமூன்று காலமுந்தொழு தாலயம்வலம்வருங் காலையினருள்தேக்குஞ் சேலைவென்றகண் மறைக்கொடிதன்னொடுந் தெக்கணைவன கேசன், மூலமாந்திரு வதரியஞ்சாய்கைவாய் முளைத்தனன்வெளிநின்றான். (ருo)

கண்டுமன்னவன் கண்கணீர்கலுழ்ந்திடக் கையினைநெடு மோலி, கொண்டுமெய்மயிர்க் கூச்செறிந்தன்பினுக் குளறிவீழ்ந்தெதிர்நிற்ப, வண்டர்நாயக னருட்கணோக்களித்துநின் னன்பினுன்மகிழ்வுற்றேம், தொண்டநின்குலந் தழைத்திடவுயர்தரு சுதன்றனையளித்தேமால். (ருக)

தந்துவர்த்தன மன்னாநந்தமையிந்தத் தலத்துரீவழிபாடு,வந் நியற்றவக் துதித்திடுமைகன்குல வர்த்தனனெனநாம, முடிதனைத் தெம தருளினனுலகெலா முறைமையிற்புரந்தீறி, லிந்தனைய பிடை யெம்பதம்பெறுதி யென் றியம்பினன்மறைந்தானல். ()

வேறு.

இவ்வாறமல னிசைத்து மறைந்திடவச்
செவ்வாறுணர்ந்த திறல்வேந்தன் செங்கைகுவித்
தெவ்வாவெளியேனை யுன்னடிமைக் காளாக்கு
மெய்வாய்மை வேதவிழுப்பொருளுன் றாள்சரணம். (ருக)

காயாமலர்மேனிக் கண்ணனும் பூங்கஞ்சமலர்
மேயானுங்காணு விமலா வடியேனைத்
தாய்போற் றலையளித்தென் றன்னைப்பணிகொண்ட
சேயாரும்வேணிச் சிவனே நின்றாள்சரணம். (ருச)

விண்ணாகிமண்ணாய் விரிபுனலாய்த் தீயாகித்
தண்ணாருங்காலாய்ச் சராசரமாயெவ்வுயிர்க்குங்
கண்ணாயுணத்திரண காட்டங்களுநிறைந்த
நண்ணாவுடையவரு ளுயகநின் றாள்சரணம். (ருரு)

பூவேறுகண்ணிறைவும் புள்வாய் கிழித்தருளு
மேவேறுகையா வெளியேன் குறைதீர்த்த
தேவாதிதேவா திருக்கண்ணு வீற்றிருக்குஞ்
சேவேறுடைய சிவனே நின்றாள்சரணம். (ருசு)

என்னத்துதித்தா னிறைஞ்சி யருள்பெற்றான்
பின்னுஞ்சிறப்பாற் பெருமானைப் பூசித்தான்

மன்னும் வதரி வலஞ்செய்து மாமறையோர்க்
குன்னும்பசும்பொன்னொருகோடியாங்களித்தான். (௩௭)

தேசிற்பராச னமைத்த சிவலிங்கம்
பூசித்தருள்பெற்றப புண்ணியனு யெண்ணரிதா
மாசிப்பெருங்கவச மந்தணர்க டாம்பூட்ட
நேசித்தணிந்து நிருபன் விடை கொண்டான். (௩௮)

பன்னியொடோன்கு படையும்புடைசூழச்
சின்னமொடுதாரை சிலம்பச்செழுங்கவரி
கன்னியர்கள்வீசக் கதிர்வெண்குடைநிழற்றத்
தென்னனகைமின்னே வலஞ்செய்துபுறம்போந்து. (௩௯)

வேதகிரியைவலஞ்செய்து வீழ்ந்திறைஞ்சி
யாதியருள்பெற்றுச் செங்கோடமர்ந்தபராஞ்
சோதிபதம்பரசித் துன்னார்திறமுருகக்
காயுங்கதிர்வேலான் காவிரிகாடெய்தினன். (௪௦)

வந்தூரகரெய்தி மன்னூர்பிரான்வாணுலகத்
திந்திரனேயென்ன வரசியற்றியீறிலா
மைந்தற்பயந்துகுல வர்த்தனனென்றோமந்
தந்து பல்கலையுஞ் சாற்றுவித்துமேம்படுத்தான். (௪௧)

பத்தியுடன்கலைக ளெல்லாம்பழுதறக்கற்
றுத்தமனுயின்றகுல வர்த்தனனுக்கோண்மணஞ்செய்
தெத்திசையும்போற்ற வெறிநீர்பிறங்குகலை
மொய்த்ததிருஞாலம் புரக்கமுடிசூட்டி. (௪௨)

இம்மைமறுமை யிரண்டுக்குஞ்சாதனமா
நன்மைநெறியொழுகி ஞானியாய்நற்றவஞ்செய்
துண்மைநிலைவேத வுமையொருபால்வீற்றிருந்த
செம்மலருள்கூடத் திருத்தாணிழல்சேர்தான். (சு ரு)

மன்னர்பெருமான்றந்து வர்த்தனவேர்தன்னசரின்
முன்னவனைப்பூசித்து முத்தனுமாய்ப்புத்திரனாக
கன்னலன்போற்பெறறுக் கதியடைந்தவாறீதென்
றுன்னரியமாதவர்க்குச் சூதமொழித்துரைத்தான். (சு சா)

ஆதலாலர்தவருந்தலத்தி னுண்மைவிரித்
தோதவோர்க்கு மூலவாதெம்மீசனைடம்
மாதலத்திற்காண்போர் வறுமைபிணிமுதலாந்
தீதகன்றவேள்போலச் செல்வராய்மேம்படுவார். (சு ள)

## பதிஞோராவது தந்துவர்த்தனன் வரம்பெற்ற சருக்கமு முற்றும்.

ஆகச்சருக்கம் கக-க்கு விருத்தம். ருஉஉ.

திருச்சிற்றம்பலம்.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## பனிரெண்டாவது

# மருத்தன் கதிபெற்ற சருக்கம்.

செந்திருக்குடி கொண்டுவைகுதிருப்புவாரி புரிப்பிரான்
றாதுவர்த்தனனைப்புரந்தருள் தந்ததன்மைவிளம்பினு
மாதரசிலை யொத்தவாகன் மருத்தனென்றொரு வன்கணன்
வடதிசைவைப்பிடை வெம்பிறப்பினை மாற்றுறுஞ்செயல் சாற்
றுவாம். (க)

கருத்துமுற்றிய சவுனகாதியர் கேட்கமெய்ப்பொருள் கை
வரும், திருத்தமிக்குள சூதமாமுனி செப்புவானுயர் விப்பிர
ராருத்தியிற்புக ழுரியதெக்கண வளகடம்பதி யதனிடை
மருத்தனென்பவனீதைகையின் மரித்துமுன்கதிமன்னினான்.

என்றுரைத்திடுமெல்லையன்னவ னியல்பனைத்து மியம்பென
வென்றியங்கனர் வினவமெய்யன் விளம்புமுன்புவி மீதினிற்
கன்றுவெஞ்சின வரியனுநர காசுரன்கதிர் கால்வட
குன்றமன்ன புயத்தினானருள் குட்டனந்தகவவுணனே. (உ)

அகமிருந்த வுளத்தினான்விற லவுணரேறெனுமந்தகன்
மகன்முரண்கெழு தூமவக்கன் மடக்கலேறனையானவன்

றகமையிற்பெறு பொருள்மருத்த னெனுந்திறற்றகு வோ னெடும், புகைமூரிந்தெழு வடவையிற்செறி புலவர்மேலமர் பொருகுவான். (ச)

அறமுமேன்மையு மன்புமேதகு மறிவுமானமு மாதியாந் திறமும்வேரொடு கொன்றுநின்றிடு தீமைநெஞ்சகருண்மை யின், மறமும்வஞ்சமு மன்னுயிர்க்கு வருத்தமும்புரி வான்மிக நிறையருந்தவு மறையவர்க்கு நெருக்கமேசெயு நீர்மையான்.(ரு)

ஆலயந்தொறு மன்னியெந்தை யருச்சனைக்குவிலக்கமாய ச சாலவங்கணி யற்றவந்தவர் தமையடர்த்த ரியற்புலா லாலருந்தல முள்ளவெங்கு மசங்கியஞ்செய் தருந்தவர் பாலடைந்தவ ராற்றும்வேள்வி படுத்தவ்வாகுதி பற்றுவான்.()

இம்பரன்றியு மும்பர்நாக ரிருக்கையெய்தி யெதிர்ந்துளார் தம்புயப்பல முழுதும்வென்று தருக்கிவாகை மிலைந்துபொற் கும்பமென்முலை மாதரார்சிறை கொண்டுதண்ட மியற்றலா லம்பொனாடுறு மெண்டிசாதிப ரனைவரும்பய மெய்தினர்.(எ)

முடங்குழைவிரு காலனிக்குல மூசுகற்பக நிரைகளைப் பிடுங்கிவந்துதன் னதரினிட்டணி பெற்றதேவரை வெற்றியா லடங்கவென்றர மகளிரைப்பல மதனிலாடல்செய தறனெ லாங், கடந்துபரவ வுருக்கொடெண்ணில கடுங்கொலைதொழ ழிலீட்டினன். (அ)

சசிமடந்தை தனக்குவட்டுறை சதமகன்றனை யாதிய திசையிருந்துள கடவுண்மன்னர் செருச்செய்தாற்றல் சிதைக ஙபோய் வசையிறுள்ள கவிக்கிமாலய வரையின்மன்னினர்

வார்சூ, ழசைவில்சன்மலி புரமிருந்தட லவுணர்கோனர சா
ற்றினன். (கூ)

மும்மைசால்புவ னத்துமிந்த முரட்கொடுந்திற லவுணர்தரு
செம்மலான மருத்தனென்றிடு தீயவன்புரி தீமையால்
மெய்மைசால்தரு மந்தவம்புகழ்வேள்விபோயொழிதாழ்வினன்
மம்மரெய்தி நடுக்கமுற்றன மண்ணும்வானுலகங்களும். (க0)

வேறு.

அடுந்திறற் கடுமருத் தாசுரன்புரி
கடுந்திறற் கஞ்சிவான் கடவுளோரிம
னெடுநெகிரிப் புறத்தினி னெடிதுகாளிருந்
திடும்பைமிக கூர்ந்துபின் னிதையதெண்ணினார். (கக)

குரவனும் பொன்னிடங் குறுகியிங்கிலை
வெருவரு முளத்தவர் விரிக்கவோர்தலும்
புரவலராதிய புலவர் தம்மொடு
மரியணான் மலைமகன வையத்தெய்தினன். (கஉ)

நனிவரு தவத்துறை நாரதாதிய
முனிவரு மினிதவண் முன்னுறுங்காலையிற்
கனிவரு முளத்தினன் கமலநாயக
னினிதவர்க் கருள்புரிந் திருக்கைநல்கினன். (கங)

இருந்தவர் தாவவனியற்கை யாவையுந்
தெரித்திட வுணர்த்தலுந் தெருட்டுவானவன்
பெருந்திற லுடையனைப் பெற்றியோன்றனை
திருந்திறங்கட்க்கரி தெம்மனோர்க்குமே. (கச)

ஆதலாலவன்முறை யணைத்து நம்மனோர்க்
கேதமதகற்றிநற் கிளைமை நல்குவான்
மாதொரு பங்குடை வரதனேயலான்
வாதையிறவத்துளீர் வல்லர்யாவரோ. (கரு)

என்றிசைத் தவரொடு மெகினப்புள்ளின்மேற்
சென்றனன் றன்னுழைச் சேர்ந்துளாரொடு
மின்றிகழ் வெண்ணிலா விரிக்கும்வெள்ளியங்
குன்றிடை யும்பர்தங் குழாத்திற் கூடினன். (கசு)

தடங்கொளு மலர்மகன் றன்னொடுஞ்சுர
ரடங்கலுந் திருக்கடை யண்மினார்களென்
றிடுங்கழனந்திபோ யிறைவன்முன்பணிந்
தொடுங்கிவாய் புதைத்துநின் றுரைத்துக் கூறினர். (கஎ)

அரிதெதிர் நந்தியெம் மடிகள்கூறலுஞ்
சுருதிமா முடிக்கருந் தோன்றலன்னவர்த்
தருதியீண்டென்னலுந் தாழ்ந்துபோயவர்க்
குரைசெய்து விரைவினின் முன்னருய்த்தனன். (கஅ)

அகணமர்ந்திறைஞ்சய வமராரதியோர்
முகமலர் மகிழ்ச்சியா னோக்கிமூரல்கூர்
பகவனுங் கண்ணருள் பரப்பினனெடுஞ்
சகத்தினை படைத்தவ னிறைஞ்சிச்சாற்றுவான். (உக)

புண்ணியபுராதன புரிபொற்கொன்றையங்
கண்ணிய வன்றனைக் கவரப்பாற்கட

னண்ணிய தீவிட மயின்றுங்களைத்
தண்ணளியாலுயிர் காத்ததற்பரா. (உ0)

அருத்தியாற் றுதித்தய னறைகுவான்மறைச்
சிரத்துறைதேசிக திதியின் மைந்தரின்
மருத்தனென் னொருகொடும்பாவிவானவர்
புரத்தையும் புவியையும பொடிசெய்தானரோ. (உக)

கருக்களைப் பிதுங்கினன றவஞ்செய் வோர்களை
நெருக்கினன் வேதியா திரப்பும் வேள்வியை
முறுக்கினன் முருக்கிதழ் மூத்தமூரல்வேற்
றிருக்கா மகளிரைச சிறைகொண் டேகினன். (உஉ)

பாங்கறு மகொடும் பதகனுற்றிய
தீங்களடபிலசில தெருட்டினே மலற்
பூங்கழற் புனிதவிப் புரந்தராதியோ
ரேங்கினர் நிகழ்ந்தவா றீதெனவோதினன். (உ௩)

இன்னண மயனிசைத் திடலுமெம்பிரான்
றனனுளத் தமைந்தவன் றனையகோரமாய்
மன்னியம மருத்தனை மடித்துநுங்களை
நன்னரிற் காத்துமென் றபயநல்கினன். (உ௪)

இப்பெருங் கயிலையி னேற்றமாயொரு
வைப்புள தெமக்கது வதரிகாவன
மப்பெருந் தலத்தைநீ ரடைதிர் போதிரென்
றொப்பிலான் றனிவிடை யுவந்துநல்கினன். (உரு)

மலைக்கொடி பங்கமர் வரதன்றன்விடை
தலைக்கொடு வியுதருஞ் சசிமணாளனுங்
கலைக்கொடி கேள்வனும் வதரிகாவன
நிலைப்பெருந் தானத்தை நெடிதுசார்ந்தனர். (உசு)

வந்தருட்காவிரி பவானி யொன்றிய
சிந்துவிற் குடைந்துயர் தெய்வமாமறைப்
பைந்தொடி பாகனைப் பணிந்தவ் வைப்பிடை
மந்திரத் தவரொடு மகிழ்ந்து வைகினார். (உஎ)

மன்னருங் கடவுளர் வதரிவைப்பெனும்
பொன்னகர் வாயிடைப் பொலிந்தகாலையி
னிந்நிலை யுணர்ந்திடு மருத்தனென்பவன்
றன்னெடும் படையொடுந் தருகினெய்தினான். (உஅ,

நெடுந்தினம் பெருஞ்சமர் நேர்கிலாமையா
லடுந்தின வுய்த்திடு மலங்கற் றேளினான்
கடுந்தழற் சீற்றத்தான் காலனெஞ்சக
நடுங்கிடுந் தோற்றத்தா னணுகினனரோ. (உகூ)

வேறு.

மூங்கையிற் கடல்வாய்நஞ்ச முளைத்தழன் றெழுதல்போல
வந்தவன் றன்னைக்காணு வானவர்முதலோர் யாருஞ்
சிந்தனை கலங்கிமுக்கட் டேவநீ காத்தியென்ன
வந்தனை செய்தாரந்த வாறெலா மமலன்கேட்டான். (௩0)

தொழுந்திரு வதரிமூலச் சுயம்பிர காசலிங்கத்து
தெழுந்தன னகோரரூப மெடுத்தெம திறைவன் செந்தீக்

கொழுந்துறழ்சடையுஞ்செக்கர் வதனமுங் கொற்றவாகு
மழுந்துமவெம் படைகளேந்து மங்கையுமாகித்தோன்ற. ()

மெய்யுருப் பார்க்குந்தோறும் வேறுவே றனந்தானந்தங்
கைகளுங் கதிர்கால்சூலக் கடும்படை கிடந்தமொய்ம்பும்
பையரா வரையும்பாத பந்தியும் வதனக்காடுந்
துய்ய பாதகங்டோறுந் தூக்கியகழலி னார்ப்பும். (கூஉ)

இன்னதோர் படிவமெய்தி யடியரை யினிதுகாப்பான்
மன்னியோர் விளையாட்டுன்னி வந்தனன் வதரிமூல
முன்னவன் பின்னுமுன்னு மூரிவெம் படைகடாங்கி
யன்னவன் மருங்குபூத ரளப்பிலர் சூழ்ந்துவந்தார். (கூஙு)

எரிசிகைச் செங்கட்பேழ்வா யெறுழ்வலிக் குறுந்தாட்பூதப்
பரிசனத்தோடு முக்கட் பராபரன்பவாகிகூடற்
புரிமதிட் புறம்புபோதப் பூரியன்றன்னைப் போர்க்குத்
திருகுவெஞ் சினத்தாற்பூதர்தெற்றென வழைக்குமெல்லை (கூச)

உருத்தமாக் கழைக்குங்கலை யோசனை யொருநூறெல்லை
யெரித்திடு மிடிபோலார்த்திட் டெழுந்தன னிரைந்துசேனை
விரித்திடுங் கடல்போற்சுற்ற விண்ணவர் கடுங்கவந்த
மருத்தனைக் கண்டபூதர் மாதரா ருருவமானார். (கூரு)

ஓவியர்க் கெழுதவொண்ணா வுருப்பொலிந் திலங்கிகின்ற
பூவையர் படிவங்காணுப் பொருக்கென வயிர்த்துமார
னேவினிற் றுளைபட்டேமாந் தெம்முடை யிருக்கைக்கிந்தப்
பாவையர்க் கொடுபோய்த் துய்க்கப்பரிந்தனன்படுவதோரான்.

மெல்லெனக் குறுமென்றென்றல் வீசியவசந்தகாலத்
தெல்லையங் கிறுத்தலாலே யேக்கறு விரகநோய்கொண்
டொல்லையிற் றொடர்ந்தானந்த வோவிய மன்னாமெலல
யல்லன்மாநகரின் பாங்கர் வந்துதம் படிவங்கொண்டார். ()

காண்டலுங் கனல்போற்பொங்கிக் கைதவப்படிவமாயவந்
தீண்டின ரிவர்கொலென்றுவெயிறுதின் றெறுழொன்றேந்தி
யாண்டவர் மீதுதாக்க வக்கணத்தகோரரூபத்
தாண்டவமூர்த்தி யந்தத் தறுகணன் வெருவத்தோன்ற.(௩௮)

உதித்திடு மிறைமேலன்பால் யோசனை நீளமாயோர்
கதைப்பெரும் படைவிட்டார்ப்பக் கடவுண்மா முறுவல்பூத்
மதிக்கதிர் மட்கத்தோன்றும் வான்சுடர்ப் பருதிகோடி [தோற்
பதித்தபோ லிலங்குகுந்தப் படையினைப்பணித்துவிட்டான்.()

அடுத்திறை விட்டகுந்தப் படையையோர் கதையாலன்னோன்
றடுத்தனன் றடுக்கவெங்கோன் றண்ணகைகோட்டிச்செங்கை
தொடுத்தொரு பொருப்புமானுந் தோமரமெறிந்தா னினச்
செடித்தலைமருத்தன்மற்றோர் சூலத்தாற்சிதைத்தான்மன்னோ.

அங்கிலை புணர்ந்தசோதி யமர்விளை யாடல்செய்வா
னுன்னிமற் றொருவிற்கோட்டி யூதைவெங் கணையைவிட்டா
னன்னவ னதனைமாற்ற மயேந்திர வம்புதொட்டான்
முன்னவ னழலம்பெய்தான் மூடனீர்க்கணையாலட்டான்.(௪௧)

அம்பைந்தா னூறுமத்த யானையைப் பிளந்தான்பின்னு
மம்பைந்தால் விளாழிசெந்து மாயிரம்பரியை மாய்த்தா

னம்பைந்தா லவுணரீரை யாயிராரவி யுண்டா
னம்பைந்தா லொருநூறூழி யுரிகிரையறுத்துவீழ்த்தான்.(௪௨)

கருமபொறு லமைத்தநூறு துலாத்திலோர் கதையைக்கைய
னரும்பொறி விழிகள்சிந்த வடற்கரத் தெடுத்துவேதச்
சுரும்பமர் குழலிபாகத தோன்றனமே லெறிந்தானந்த
விரும்பெறுழ்சாமபராயவெங் கிற்றது பலருங்காண. (௪௩)

மறைமுதலை மீட்டுருசெந்தீ வடவையின் பிழம்புபோல
வுறுகதிர்ச சூலமூன்றி யோசனை நெடுமைத்தான
தறைகழன் மருததன்மார்ப மகழ்ந்திட வெறிந்தான் மற்றோர்
திறலுடைச்ச சூலமவேறு திரித்ததைத் தடுக்கவிட்டான். (௪௪)

ஆண்டகைப்படைபோயங் ஞெனயிற்படைதுமித்துமார்பைக்
கீண்டவனுவிவெளவிக கிளாமதிக்குழவிவேணித்
தாண்டவன் றிருக்கைவந்து தங்கிய தமரர்யாரு
மாண்டவன் றன்மைகண்டு மலர்மழைவருடித்தார்த்தார(௪௫)

மலையெனத தளர்ந்துசாய்ந்த மருத்தனுன் மறைமின்பாக
னிலையயிற் சூலத்தாக மிற்றலான் முற்றுஞான
நிலையினை யடைந்துதிண்கை நெடுமுடிகூப்பித்திங்கட்
கலைமுடி யவனைநோக்கிக் கண்கணீர்கலுழக்கூறும். (௪௬)

பாவியேனையநின்கைப் படையிலிப் பவாகிவைப்பி
னுவினீத்திடு பேறுற்றே னுதலா லறிஞராமேனோர்
மேவுகின் பதந்தந்தாள வேண்டுமென் பெயரொங்காளுந்
தேவகிற் கிருத்தல்வேண்டு மெனக்குறை யிரந்துரைத்தான்.

கொடுந்தொழிற் புலையரேனுங் குறுகினர் தம்மைக்காக்கு
கெடுந்தகை யாதலாலே நிமலனுமதற்கு நேர்ந்தான்
கடுந்திறன் மருத்தனாவி சிவகணங் கவர்ந்துவெள்ளித்
தடங்கிரி யுய்த்தார்வானத் தருமல ரிமையோர் தூர்த்தார்.()

நேயமுற் றிரர்துளோர்கள்யாரேனு நினைத்தவெல்லா
மீயுமெம் பெருமானன்பர்க் கெளியவனாதலாலே
மாயைவல் லவுணன்வேட்ட வரநல்கி மருத்துலிங்க
மாயினன் வதரிமூலத் தமர்ந்தரு ளமலமூர்த்தி. (சகூ)

எண்ணருங் கணங்களோடு மெய்தியவகோரமூர்த்தி
விண்ணவர் வாழ்த்தமூல விலிங்கத்துட் புகுந்தானந்தப்
புண்ணிய விபுதரெல்லாஞ் சங்கமப் புனறோய்ந்தன்பா
யண்ணலைப் பூசையாற்றி யங்கமர் வதிந்தார்மன்னோ. (ரு௦)

அந்தமுமுதலுமின்று மில்லவ னகோரமூர்த்த
மந்திரமிந்த வைப்பின் வைகியோ ரெட்டுவைகல்
சிந்தையிற் சுசியராகிச் செபித்திடிற் பவங்களெல்லாம்
வெந்தழற் பஞ்சாயாக்க மேவிப்பின் வீடுசார்வார். (ருக)

ஆற்றவுமன்புகூர்ந்திக் காதையை யரசர்கேட்கின்
மாற்றலர் பகையைவென்று வாகைபெற்றுயர்ந்துவாழ்வா
ரேற்றமிக் குயர்ந்தவிந்த வெழிற்றலப் பெருமைவேதஞ்
சாற்றிடுந்தகைமைத்தல்லான் மற்றையோர் சாற்றற்பாற்றோ

மாதிரமளக்குந் திண்டோண் மருத்தனிவ் வதரிசூழ்ந்த
போதலர் கமழ்பயாகி புரியிடை யாவிநீத்து
மேதகு கயிலைசேர்ந்த விதமிதென் றறிஞர்கேட்ப
ஓதருமறைதேர்சூத முனியெடுத் துரைத்தான் மன்னோ. (ருரு)

## பனிரெண்டாவது மருத்தன் கதிபெற்ற
## சருக்கமுற்றிற்று.

ஆகச்சருக்கம். கஉ - க்கு விருத்தம். சுஎரு.

திருச்சிற்றம்பலம்.





**உ**

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## பதின்மூன்றாவது

# சக்கரதீர்த்தச் சருக்கம்.

---

திருத்திகழ் தழலின்வைகுந் தெக்கண வளகை யென்னும்
புரத்திடை மருத்தன்பேறு புகுந்தது புகன்றேமும்பர்
தருத்திரு நாடுபோற்றுஞ் சககரதீர்த்தமாதி
யுரைத்திடுந்தீர்த்தமேன்மை யுண்மையி னுரைத்துமேமால்.

மங்கல மறையோர்கேட்ப மீளவும் வழுத்துஞ்சூதன்
சங்கமச்சயம்புமூர்த்தி சன்னிதிக் கீழ்பாற் கற்றைச
செங்கதிர்ப் பருதிப்புத்தேள் சிவலிங்கம் பதித்துப் பூசித்
தங்கதின் குடபாற்றன்பே ரமைத்தொருதீர்த்தஞ்செய்தான்.

தனுமதி யதனிற்றிங்க ளுண்மதிச சடையோன் றன்னாள்
புணையமா வாசைமிக்க பூரணையிவற்றினந்த
வினைநெடுந் தீர்த்தமாடி யிரவிமந்திரத்தாற்செம்பிற்
குனிதரு கலத்திற்கோதி குளமுதனிரமபப்பெய்து. (௩)

தக்கணை யொடுமுன்னூலோர் செங்கையி லளித்தாலாங்கே,
பக்கனைத் தகன்றுநீங்கு மருஞ்சுரா பானதோடுஞ்

செக்கர்வான் கதிர்மூன் றன்கு மந்திரஞ் செபித்தத்தீர்த்தம்
புக்கினிதாடு தூயோர் பொன்னுலகமர ராவார். (௪)

மயர்வறுமனத்தோராகி மறைங்கொடி பங்குளேனைத்
தயையொடுங் தியானித்தங்குத் தரக்கதள் வைகிகாளு
முயர்தரு மெழுத்தைந்துள்ளே யுசசரித்தொழுகின்வெய்ய
முயலகன் குமரகண்ட முதுபிணி குலையுமன்றே. (௫)

முன்னவன் கோயில்வைகி முறைமையா லெழுத்தோரைந்து
முன்னிரோர் சீராந்தத்தி ஞெளிவிடு விமானமேறிக்
கன்னல்விற் காமற்காய்ந்தோன் கைலையிற் கற்பகால
மன்னியங் கிருந்துமீளா மலரடிமுததி சேர்வார். (௬)

மதுகிரியேமகூட முன்னவனருணைக்குன்றங்
கதிதரு காஞ்சிகாசிக் காத்தியம் பகங்காளத்தி
சதுமறை வனஞ்செங்கோடு தயங்குகோ கருணத்தான
மதிதரும் பிருதுகன்னம் வளங்கெழு கும்பகோணம். (௭)

மன்னருள் சிறந்தவீமவனந்திரு வானைக்காவல்
பொன்னவிர் புலியூராலம் பொழிலரும் திருவெண்காடு
தன்னியவாரூரிந்தத் தலங்கதி மறுமைக்கீயு
மின்னருட் பவாகிகூட லிகத்திலே முத்திகூட்டும். (௮)

தெக்கண வளைகையாருத் திரதெரி சனஞ்செய்துள்ள
தக்கவர் தமைக்கண்டன்பாற் றாழ்பவர் கயிலைத்தானம்
புக்கினி துறைவரென்றாற் புகல்வதென் புனர்பூசத்தி
னக்கதிர்த் தீர்த்தந்தோய்வோர் பெறும்பலனளக்கொணாதால்.

மார்கழி மதியின்மூல நாண்முதற் காலின்வானத்
தேர்கெழு பருதிவந்த வெல்லையிற் புலருமுன்போய்ச்
சூரியதீர்த்தந் தோய்ந்தம் முப்பதுதினமுந தூய
நார்கொடத் தடத்துளாடி யாதவனுமமுன்னி. (கo)

என்னரு மகரத்திங்க ளிரதசத்தமிநாளேழு
வெள்ளெருக் கிலையிற் சாணம் வியந்துவைத் தறுகுசூடித்
தெள்ளுமக் கதைதூய் வெயயோன்றீம்புனறோய்ந்துநெய்தற்
கள்ளவிழ் மலர்தூய்மன்றுட் கடவுளைவழிபட்டுள்ளோர். (கக)

புத்திரபௌத்திராதி பொருவறவுயர்ந்தபோகந்
துய்த்தபின் வீடுசேர்வா ராதலிற் சுடரோன்றீர்த்த
வுத்தமநலனையரவ ருரைப்பவ ருயர்ந்தவேதச
சத்திபங்கமர்ந்தஞானச்சயம்புவுக் கீசானத்தின். (கஉ)

குருமணிப்பொன்னியாற்றின் குணக்கிலோர்குரோசந்தன்னி
லொருமையா லுள்ளன்பூறி யுரோமசன் பதிட்டைசெய்தா
னொருசிவகோசமேல்பா லோங்குசஞ் னிதியதாகவி
யிருமையா லிலிங்ககாம முரோமகேச் சுரனென்றிட்டான். ()

மலத்தைவென் றவன்ருபித்த குறியைமார் கழியந்தத்திற்
சலத்துயர்பொன்னி ன்னீர் சங்கற்ப விதியாலாட்டித்
திலத்திலக் கதையிலற்சித் திறைஞ்சிடிற் றெவ்வாங்கூற்றின்
வலித்திறஞ் செகுத்துவானோர்வாழ்த்திட வளமைபூண்பார்.()

வேறு.

சங்கரன் வதரியின் றருவின்றக்கணத்
தங்கனை ரம்பிடு தாரக்கம்பய

மங்கையை மணிகிளர் மார்பினேந்திய
செங்கண்மால் சக்கர தீர்த்தமொன்றரோ. (௧௫)

பஞ்சபாதகங்களைப் படியிற் பஞ்சதைச்
செஞ்சிகி தீத்தல்போற் றீக்குமன்னதிற்
றஞ்சமென் றடைந்தொரு தானஞ்செய்திடி
னுஞ்சவே றொருதவ முஞற்றவேண்டுமோ. (௧௬)

மார்கழி தனிலமா வாசையிற்றடந்
தேர்கெழு மிரவிமந் திரத்தையுச்சரித்
தாரெனுங் குடைந்தா னாலயத்தினை
யேர்பெறப் பன்னிரு வலஞ்செய்தேத்திடின். (௧௭)

உடுபதி முடிபுனை யுருத்திராதியர்
வடிவொடு கைலையின் வைகுவார்நெடும்
படியினை யளந்தவன் படைத்ததீர்த்தத்தின்
முடிவெடுத் தியம்பிட வெவர்க்குமுற்றுமோ. (௧௮)

தொக்கநன் மேடமா மதயுறுசுக்கில
பக்கமுஞ் சித்திரை நாளும்பைங்கலை
மிக்கபூரணையுமாம் வியன்றினத்தினிற்
சக்கர தீர்த்தமாந் தடத்தின்மூழ்கியே. (௧௯)

விரிந்தபைங் கமலத்தால் விமலற் பூசித்துத்
திருந்தியங்கப்பிர தெக்கணஞ் செய்தோர்
புரிந்த வெம்பவங்களைப் பொடித்துநித்தமா
யிருந்தமெய்ஞ் ஞானவீ டெளிதினெய்துவார். (௨௦)

வனப்புறு மிடபமா மதியிற்பூரணைத்
தினத்தினில் கேயியங் தீர்த்தந்தோய்ந்தளி
தொனித்திடும் வகுளமாந் தொடையிலந்தையம்
புனத்துறை விமலனுக் கணிந்துபூசித்தோர். (உக)

குலத்தொடுங் கைலையிற் குடிகொள்வார்நறை
யலர்த்துள வணியுளா ளுழிதீர்த்தத்தி
னலத்தொடு குடைந்துபொன் னளிருந்தேர்மிசை
மலைக்கொடிபாகனை வணங்கிப் போற்றினோர். (உஉ)

தெரிந்துசெய் பவமெலாந் தீயவெம்பிணி
மருந்தினி லவிதல்போன் மாய்ந்துமாசகன்
றருந்தவ முடையரா யளப்பில்போகந்துய்த்
திருந்துபின் வீடடைந் தின்பமெய்துவார். (உங)

தெய்வநாயகன்றிரு விருக்கைத்தென்றிசை
மெய்வளரகுட்டிரி வேணிசங்கமத்
துய்யநற்சோதியந் துறையின்மேன்மையை
யையமில்வேதமே யறையவேண்மொழி. (உச)

பொன்னினைக் களவுசெய் புலையர்நான்மறைக்
கன்னியர்க்காதல்கூர் கடைஞர்தேசிகன்
பன்னியைவிருப்புறும் பதகர்பண்பொரீஇ
மன்னுயிர்க்கொலைபுரி மறங்கொள்தீமையோர். (உரு)

அந்தணர்க்கிறுசெய் யழிம்பரீன்றதாய்
தந்தையர்க்குறுகணே தந்தபாவியர்

பைந்தொடியார்களைப் பசுவைக்கொன்றவர்
மந்திரங்களிற்றழன் மடுத்தகாதகர். (உசு)

இன்னமுங் கொடும்பவ மிழைத்தபாவிய
ரென்னினும் பொன்னியு மெழிற்பவானியு
மன்னமெய்ப் பராசர னமுதக்கேணியு
முன்னியசங்கம முகதத்திற் றோய்ந்திடின். (உஎ)

சாடும்வெங் கதிர்க்கரந் தடவப்பார்மிசை
மூடுபுன்பனிப்பகை முரிந்தபோலகன்
றோடிடும்பிறவியை யொழித்துநித்திய
வீடுதந்திடும்பலம் விளம்பவேண்டுமோ. (உஅ)

செப்பரும்புண்ணிய தீர்த்தம்யாவுமவ்
வைப்பிடைத் தனித்தனி வயங்குமாதலா
லப்பெரும் பவானியா மருந்தலத்தினுக்
கொப்பொரு தலங்கட லுலகிற்காண்கிலேம். (உகூ)

தெக்கணவளகைவீரய்ச் சேறுமென்றுள
மிக்கதோர் ராசையின் வியந்துமூன்றடி
வைக்கினும் வாம்பரி மேதமாமகம்
புக்கினிதாற்றிய புனிதமெய்துவார். (௩0)

குருமணியிடைக்கிடை கோத்தகண்டிகை
பரமனுக்கணிந்தவர் பவனிவாகனந்
திரமுறத்திருத்தினோர் தீபதூபக்க
லருமைவெண் கவரிகள் குடைகளாற்றினோர். (௩௧)

விஞ்சையரியக்கர்கள் விபுதர்சூழவெண்
குஞ்சரமுகைத்தொளி கொழிக்குந்தண்டிகை
யெஞ்சலின் முனிவர்க ளெழுவர்தாங்கப்போ
யஞ்சுடர்மணித்தவி சமர்ந்துவைகுவார். (கஉ)

அறம்பயிலங்கக ரருமைத்தாதலா
லுறுந்திருத் தீர்த்தத்தி னுயர்வுமன்னதே
திறம்பெறு தவத்துளீ ரென்றுசெப்பினன்
மறங்கடிந் தருள்வடி வானசூதனே. (கங)

## பதின்மூன்றாவது சக்கரதீர்த்தச்

சருக்கமுற்றும்.

ஆகச்சருக்கம், கரு-க்கு விருத்தம், (எ0அ)

திருச்சிற்றம்பலம்.





உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

பதினான்காவது

# காயத்திரிமகிமையுரைத்த

## சருக்கம்.



திருவினாயகன் றிருத்திய கக்கரதீர்த்த
மிரவிதீர்த்தமென் றியம்பிய தீர்த்தத்தினேற்ற
முறைசெயதேமினி யொள்ளிய பொன்னியங்கரைவாய்
மருவியோங்குகாயத்திரி மகிமையைவகுப்பாம். (௧)

தனையுணர்ந்தருள் சவுனகன் சூதனைமீட்டும்
வினவுவானருள் விரித்திடும் வேதவெற்பிந்த
நனையவார்பொழிற் பவீரமாநகர்வட ஞாங்கர்
புனிதபூரணைப் பீடிவமாய்ப் பொலிந்துளதென்றாய். (௨)

சுருதியோங்கலு மந்நகத்தென்றிசைச் சுயம்பா
யரிதுதோன்றிய விலிங்கமும் வதரியுமணித்தாய்த்
தெரிதருஞ்சிவ ஞானகாயத்திரி சிலையு
மொருதிருப்படி வேயெனவுணர்த்தினை யுரவோய். (௩)

கங்கையாதிய நதிகமலாலய முதலாய்த்
தங்குதீர்த்தங்கள் சிதம்பரமுதலிய தலங்க

னெங்குமேறிய வுருப்பலமனைத்தையு மொருநா
ளீங்கிருந்து காயத்திரிசெபித்திடி லீயும். (ச)

எனவெடுத்தெமக் கியம்பினை யாதலாலந்தப்
புனிதமிக்ககா யத்திரிமகிமையைப் போத
வினிதிசைத்தியென் றிரந்தவர்க் கெழின்முகமலர்ந்து
கனியிருத்திய கருணையான் கழறுவதானான். (ரு)

திருமறைக்கிரிக் கிரண்டரைக் குரோசத்தின் றென்சார்
மருவிலங்கையின் மருங்கம ரிலிங்கத்தென் கீழ்பால்
வரமலிந்த காயத்திரி யேசிலாவடிவா
யுருவெடுத்தவ ளுறைதலா லுரைககவும்படுமோ. (சு)

நீக்கமற்றிடு மகண்டபூரணத்தினை நெடிது
நோக்கினன்னுதி முனையின்மேற் பார்வையைநிறுவி
நோக்குமாதவ வியாசனந்தரங்கமாய் நுவன்ற
வாக்குவாணியம் மகிமையெற்குணர்த்தலா லுரைப்பேன்.(எ)

விட்டில்வண்டின மசுணமீன் விழைதல்போல் விடையக்
கட்டிலாழ்ந்திடு மிந்திரியஙமங்கையுங் கடந்த
சிட்டயோகியர் தெளிவுறுமனத்திடை விளங்கப்
பட்டதன்னகா யத்திரி சிலைத்திருப் படிவம். (அ)

முந்தைவர்னவ ரர்ச்சனைமுடித்தலம் புடைத்த
கந்தரப்புயக் கவுரியர்மரபின் முன்றோன்று
மிந்துசேகரற் கடிமைசாலிந்திரத் துய்மன்
சிந்தையன்பொடு கீர்த்தியுந் திரைக்கிணிதெழுந்தான். (கூ)

பாங்கருள்ளன தலந்தொறுந் தீர்த்தங்கள் படிந்து
தேங்கொடென்றலஞ் சிலம்பிடைச் சென்றதினிதொழுகி
யோங்குதாம்பிர வன்னிமாநதிக்கரை யூற்று
றோங்குநாரத முனிவர னருளொடு மடைந்தான். (௧௦)

வரங்கொ ண்மாதவற் காண்டலுமன்னவன் வணங்கிக
கரங்கள்கூப்பிநின் றேதநின் கழறொழுவடியேன்
றிரங்கொண்மாதவ முன்செய்த திவ்விய பலமென்
றிரங்கினன் முனி யாசிகூறீஇ திருக்கையீங் தனனால். (௧௧)

இருசதவேந்தனவ் விருடியர் தலைவனை நோக்கி
யருந்தவத்தினி லானிழலிறையன்று யகிலத
திருந்தசைவமா தலங்களிலேற்றமாய்க் கொங்கிற்
பொருந்துசகம புரமதென் றறிஞர்கள் புகன்றார். (௧௨)

சிரிலங்குமத் திருநகர் மகிமையைக் கேட்கப் '
பேரவாவெனக் கென்றலும் பெரியவன் மகிழ்வுற்
றாரமல்கிய புயத்தினை யாநகர்மேன்மை
பாரின்மிககது கேளெனப் பரிவொடும் பணிப்பான். (௧௩)

சைலைவெற்பினின் றொழுகிய பொன்னியுந் தகைசால்
துய்யவெண்டிரைப் பவானியுந் துகளறக்கூடு
மையிறுனததின் விளங்கிய வதரிகாச்சிரம
முயவதற்குயிர்க் குறுதியாயிருந்த திவ்வுலகின். (௧௪)

வதரியொன்றருள் வடிவமாயிருக்கு மம்மருங்கு
மதுரிக்கண்மரு மறைக்கொடி பண்கொமொனக்

கதிரிலங்கிய சங்கமலிங்கமாய்க் கயிலை
முதல்வன்யாவர்க்கு மனுதியாய் முளைத்தவணிருந்தான. (கா)

பன்னரும் புகழ்ப் பராசரன் பங்கயன் றிருமா
லுன்னுமும்பர்கோன் வியாசமாமுனி துருவாச
னின்னறீ ரயிராவத மிவரெலாம்பூசித
தந்நலம்பெறு தலத்திடைவேண்டின வடைந்தார். (கசு)

அக்கதிர்ச்சிவ சயம்புவுக் கக்கினிபாகத்
திக்கிருந்தது தெய்வகாயத்திரி சிலையா
மிக்கவன்னதின் மகிமையை யாதெனவிரிப்பேன்
றொக்கவெம்பவப் பிணிக்கது தூயமருந்தாமால. (கஎ)

அனையதானம தடைந்துநீர் குடைந்தகச சுசியாய்த்
தனிவெண்ணீ றணிந் தணிதிகழ் கண்டிகை தாங்கி
யினிதுவைகிழு வெட்டெழுத தாகின் றிலங்கும்
புனிதமானகா யத்திரியினைசெபம் புரியின். (சஅ)

வேறு.

உலவாதுடர்கா யத்திரியுச் சரிக்கிலெழுத்துக் கொருகோடி
பலமாம்காலாறெழுத்துக்கும் பலமுமன்ன நலத்ததே
தலமாமதனிலுபவாசித் தனையதனிமக் கிரந்தன்னை
யலையாதுளஞ்செற் றுபிரப்பத் தானவுருவாங் கிருந்தாற் றின்.

சித்திவெட்டும் பின்றொடரச் சிவன்முத்தராய்ச் சிறக்கு
முத்தியடைதற்கையமிலை மூன்றைக்தேக வைகலவண்
பத்திபுரிக்துவைகியிக்தப் பரமகாயத் திரிசெயித்த
பக்கிபோன்கள் ருமபிறவிற் றன்புமனுவுங் றொட்டாதால்.()

பார்த்தாவராத் திரியுண்டி யொழிந்துபரமபாவனமா
யிருந்தப்புனிதப் புனன்மூழ்கி யீசற்பரசி யாசின்றி
விரிந்தகாயத் திரியினைமுன் விளம்புபடித்தாங் கிருந்துசெபம்
புரிந்தபேர்கள் பரப்பிரமப் பொருளிலயிக்க மாவாரால். (௨௧)

தவிசாங்கலைத்தோ றணின்லைகித் தனிக்கணுசி நுனிநிறுவித
சிவசந்தொறுங்கா யத்திரியைச் செபித்தாயிரநா றுருவேற்றி
பவிசதாற்றித தினங்கடோறு மொருபோதருந்தி யரியிடபத
துவசந்தன்னைத் தொழவல்லோர் தொலையாப்பரமபதம்புகுவார்

மண்ணோர்யாவ ரெனினுமிகவருந்துங் கொடியநோயரெனுங்
கண்ணுறகாயத் திரிசிலையை வந்துகாணப் பெறிற்கலாப்
பண்ணோயகலு மனையதிருப் புனலிற்றோயிற் பொருவிறிரு
வண்ணவமல னருணிரம்பு ஞானநெறியு நண்குறுமால்.(௨௩)

பரமாங்காயத் திரிசிலையின் பாங்கர்வாணி திருத்தீர்த்தந்
திரமாஞ்சாவித் திரிதீர்த்த மிரண்டுஞ்சிறந்த வதின்மூழ்கிப்
பிரமாவுணர்தற்கெட்டாத பெருமான்றன்னை யிறைஞ்சுவோர
கருமாசகற்றி வினைநீக்கிக் கைலையடைந்து வாழ்வாரே.(௨௪)

திருந்துங்கடவுட் டுருவாசன் சிறக்குங்காயத் திரிசிலைமாட்
டிருந்துதவநோற் றுறைகின்று னிமவான்மடந்தை பிறவிக்கு
மருந்தாமந்தத் தானத்தை மருவிநோற்றுச் செங்கோட்டுப்
பெருந்தண்கிரிநா கீசர்வலம் பெற்றானுலகெல்லாம்பெற்றான்.

நலங்கொள்கமல மகள்கேள்வன் காயத்திரிநீர் கனிமூழ்கி
இலங்கைவிபவுஷ்பூசித்தன் னிமையோர்போற்ற வினிதிருந்தான்

வலங்கொளிரவி குலராமன் வந்துமகிழ்ந்தப் புனன்மூழ்கிச
சலங்கொளிலங்கையிராவணனைத் தடிந்துசீதைதனைமீட்டான்.

வந்தியானோர் வந்தீண்டிக் காயத்திரிநீர் மகிழ்ந்தாடின்
மைந்தர்தம்மை யுயிர்த்திடுவார் மறங்கூர்விடமு மருந்தாரா
லிகதங்கலைமை மறைகளெடுத் திசைத்ததாமிந் திரதநுயம
சிக்கைதெளிதி யெனத்திகழ்ததி மீட்டும்தெய்வ முனிகூறும்.()

மேலாய்விளங்கு மதிகுலத்து வேந்தன்விசையன் வியாசனிடை
நூலார்துரோணன் வீடுமனை முதலாய்நுவன்ற வரபால
ரேலாவவரை வெல்லுமா றெவ்வாறென்ன வியம்பமறை
நாலாய்வகுத்தமுனி தெரிந்து நவில்வானவிசையனயப்புறவே.

தொக்கிற்தெய்வ வதரிவனங் குறுகிச்சங்க மேசுரனை
யங்குப்போற்றித் தென்கீழ்பா லவிருங்காயத் திரிதீர்த்தந்
தங்குமதனிற் குடைந்தாடிற் றசவசரசு நின்னெண்ணம
பங்கமின்றி முடிக்குமெனப் பகர்ந்தான்வேதம் பகுத்தமுனி.()

பணித்தநீர்மை கேட்டசிலைப் பார்த்தனெழுந்து பவாநிகா
மணத்தவதரி கிழன்மூளைத்த மழுவலானை வழிப்பட்டங்
கணித்திமரர்கா யத்திரிநீ ராடித்துரோணன் முதலோரைக
கணத்தின்வென்று கடல்சூழ்ந்த வகிலமுழுதுங் காத்திட்டான.

சிலையாசிரியன் றிருமைந்தன் சிறந்தவதரி வனம்புக்கு
மலையாரணங்கின் மணவாளன் மலர்த்தாள்வழுத்தித் தென்கீழ
மலையார்காயத் திரிநீர்தோய்ந் தங்கணிரிதாங் தவமாற்று [ பா
லிலையாமியமற் றேஞ்சிவி கெடுதபெற் றின்புற் றிருந்தான்.(கூக)

ஆதலாலத்தலமகிமை யளப்பில்காயத் திரிமகிமை
யோதற்கரிதுவேதகிரி யுண்மையதினும் பெரிதாமென்
றேதங்கடிர்த நாரதன்பண் டிசைக்கவோர்ந்திந் திரத்துய்மன்
போதமகிழ்ந்துய்ந்தனனென்றுபுகன்றான்முனிவர்க்கருட்சூதன்

பருதிமதிசூழுலகினிடைப் பவாநிகூடற் பதியுண்மை
பெரிதென்றுரைத்தமுனிவோனைப்பின்னுமுனிவர்வினவுவார்
சுருதிமலையின்பெருஞ்சிறப்பைச்சொன்னீயென்னத்துகளறுத்
த, புனிதமுனிவர்தமாங்கேட்பச் சூதன்மீட்டும் புகலுவான். ()

## பதினொன்காவது காயத்திரிமகிமை யுரைத்த

## சருக்கமுற்றும்.

ஆகசசருக்கம் பதினொன்றுக்கு விருத்தம்.(எசுக)

திருச்சிற்றம்பலம்.





உ

சிவமயம.

திருச்சிற்றம்பலம்.

# பதினைந்தாவது.

# வேதகிரிமகிமையுரைத்த சருக்கம்.



மைபிறைய்வ வதரிச்சிவபுரச
செய்யகாயத் திரிசிலையுண்மையை
யுய்யநன்கினி தோதினமொப்பிலாத
துய்யவேதகிரிப்புகழ் சொல்லுவாம. (க)

சூதன்வாண்முக நோக்கிச் சுடர்விடு
சாதயோகச சவுனகன் கேட்குமுன்
வேதவெற்பின் விழுமிய மேன்மைசற்
றோதிநைய்விரித் தோதுதி யீண்டென. (உ)

என்றயோக விருடியர்க் கின்னருட்
குன்றன்றனுரைக் குங்குணத் தீர்குளிா
துன்றுசோலைச் சுருதிச்சிலம்பதின்
வென்றியேற்றம் விளம்புதற்கொண்ணுமோ. (ரு)

அந்தணர்க்குரைப் பானருட் சூதன்முன்
பிந்திரத்துய்மனுக் கெழின்மாமுனி

சிர்ணைதமீக்களி கூரத்தெருட்டிய
சநதவேத சயிலப்பெருமையை. (ச)

மாற்றருர்திண் மதுகை யிடவரென்
றுறறன்மிக்க வவுணர்களி பண்டையிற்
றேற்றிறருல குஞ்சுரர் யாவருங்
கூற்றைறேருயி ரிற்குலைங் தாரரோ. (ரு)

பொற்றருக்களைப் போய்ப்பறித்தும்பரை
வெற்றிகொண்டு விரிஞ்சன் மனேவதிக்
குற்றடர்ர்தங் குடர்சது ராரணம்
பற்றிவெய்திற் பறித்தனரேகிஞர். (சா)

மருயலர்க்கண் வளர்பவன் மாநகர்
பொருமியேங்கப் பொருக்கெனக் கொண்டுபோய்க்
கருமனக்கொடுங் கண்டகர் கால்கிளர்
பருமகோததிப் பாதலத் தெய்திஞர். (எ)

அருணமவேத மவிணர்கொண் டேகலு
மொருமையைய ரொழுக்கமும் வேள்வியுந்
தருமமுந்தவ முந்தவைழ் வைதிக
கருமமுந்தனி போய்க்கடற் புக்கதே. (அ)

அருகனேபர மாமென் றறைதருந்
திருகுநூல்பல தேர்ந்திடு சாக்கியர்
கருகிருட்சமை யங்கதித் தெங்கணும்
பெருகியோங்கிப் பிறங்கிய தாலரோ. (கூ)

தண்ணந்தாமரை தங்கயன் பாற்கட
னண்ணிவெண்ணரு நாகணை மேற்றுயில்
பண்ணவற்புகழ்ந் தின்னபரிசெலா
மண்ணளந்தவற் கோதிவழுத்தினான். (க0)

வருதிறத்து மதுகை யிட்வரைப்
பொருதுவென்று புகழ்மிகு வேதம்டாங்
தருதுநின்வயி னஞ்சலை தண்ணறுப்
பெரிதொழுக்குமெம் மூந்திபிறந்துளோய். (கக)

எனவுரைத்தெழுந் தெய்தினன் கற்பக
வனம்வழுத்து வதரி வனத்தினைக்
கனிவினுங்க ணிலங்கையின் கண்வளர்
புனிதனைத்திருப் பூசை திருத்தினான். (க௨)

நசசராவணி நம்பனருளினான்
மச்சமாகி மகோததி யிற்புகுந்
தச்செருக்கரை யாவியுண் டந்தணர்க்
கிச்சைநான் மறையைக் கவர்ந்தெய்தினான். (க௩)

அடுத்தகாண்மல ரண்ணல் பொருட்டற
முடித்தநான்மறையோர்பொருட் டெய்புகழ்
தொடுத்ததெய்வச் சுருதியைத் தூயர்பாற்
கொடுத்தனன்மலர்க் கொம்புறை மார்பினான். (க௪)

கலைதெரிந்தறங் காப்பவர் வேதங்க
ளெதிரிக்கு மிடக்குந் தருதியா

னிலை தெரிகிலர் நீளிற வண்ணனைத்
தொலைவிலன் பிற் றுதித்தலுங் தோன்றினன். (கரு)

விரைவினங்கண் வியாசன் படிவமா
புருவடைாதவி ரொண்சுடரா ழியோன்
பருவமுயர்ந்த வதரிவனததடைந்
தரிவையாகத் தமலனைப்பூசித்தான். (கசு)

ஈண்டிமூல விலிஙகசசயம்புவை
டாண்டுநூறன வுளசிறந் தன்புளம்
பூண்டுபூசனை செய்யப் புராந்தகன்
றாண்டருஞ்சுட ரா யெதிர் தோன்றினன். (கஎ)

பாசமற்ற வியாசனைப் பார்த்துநின்
பூசனைக ளுவந்தே மிப்புரிதனக்
கேசிலுததர பாகததிருந்திடுங்
தேசினிற்றிகழ் சாய்கைக் கிலம்பரோ. (கஅ)

அப்பொருப்பணுடங் தாரண நான்கையுஞ்
செப்பமாகத் தெருட்டி யுயர்ந்துளோ
ரெப்பயன்களு மெய்த வளித்தியென்
றொப்பிலானருட் போத முதவினன். (கக)

அருளடைந்து வியாச னுள்ளன்பினாற்
றெருளினுத்தர திக்கின் மறைச்சிலம்
பிருளறத்து விளங்கல்கண் டண்டினன்
மருளுறாத்தர் மயக்க மகற்றவே. (உ0)

வேறு.

வென்றைம்புலனை வேரறுத்த வியாசன்றாக்கா சனத்திருந்து
பொன்றாழ் சடையோன்கழலுன்னிப்போதமிக்கமுனிவரொடு
மொன்றாயத் தலைகால்தெரியாது திரிந்துவிரிந்தவொருபெரிய
குன்றாகாரமாய்க்கிடந்தகோதின்மறையைத்தனிநோக்கி.(உச)
மன்னுமந்த மறையையனுவாகங்காண்டம் பிரசினமென
றுன்னுமூன்று வகையாகி யவற்றைநாற்பங் குகூற்றிட்டே
தென்னிருக்கொடெசுர்சாமமியம்பற்கரிதாமதர்வணமென்
றன்னநாற்பாற் பகுத்ததனை யந்தணாளர்க் களித்திட்டான்.()
சுத்தமுனிவன் றாக்கொண்ட தூயமறையோர் தொல்சுருதி
யத்தியான பாராகித் தருமமனுவுந் தவிராமற்
சித்தநிலைகூர்ந் தாற்றிமகஞ் செய்துபுவியிற் சிறப்புற்றார்
முத்தயோக முனிவரெலாந் தத்தநியம முயன்றிருந்தார். ()
மாதோர்பாகன்றிருவருளால் வியாசன்வந்து மறைநான்கைப
பேதாபேதந் தெரிந்தறிஞர் பேணப்பிரித்துக்கொடுத்ததனால்
வேதாசலமென் றனையதிருவெற்புக்குயர்பேர்வந்ததென [மை.
வோதாமுனிவன் மீட்டுமெகிழ்ந் துரைப்பானந்தப்பொருப்புண்
செங்கண்மாய னவதாரஞ் செய்யுந்தோறு மிச்செழுமறையின்
பொங்காணைந்து பூசித்துப்போவான்புத்தேள்பெருமான்முன
வெங்கணழல்கால் விருத்திரனை வென்றவெய்ய பிரமகத்தி
யங்கணடைந்து பூசித்து நீங்கிச்சுவற்க மளித்தனனால். (உரு)
அன்னதன்மை வரன்முறையாலறைதியென்னவருள்செய்வான்
முன்னமுறண்சேர் தானவருண்மூரித் தடந்தோள்விருத்திரனெ

ன், றன்னற்கரிய கொடியதிறலொருவனளவில் தவமாற்றிப்()
பொன்னிற்பொலிந்த நகர்முதலாம்புரங்கள்யாவுமபீடித்தான்.

எண்ணுயிரத்தோன் முதலாய கடவுளோர்பாற் கடலிண்டித்
தண்ணுர்தழுவங் கமழ்திருத்தோட் டாமோதரன்பான் முறை
யிட்டார்,மண்ணோரடியாலளந்ததிருமார்பன்மகிழ்ந்துவரமருளி
விண்ணோர்பெருமான் றனக்களவில்வீரங் கொடுத்துவிடை
கொடுத்தான். (உஎ)

மருட்டுநுகரும்புலவர்பிரானவரம்பெற்றெழுந்துவிருத்திரன்
போ, யிருந்துதவஞ்செய்யிடமாடியீண்டித்தடக்கையிடைச்சுட
ர்போல்,விரிந்தவயிரப் படையாற்கண்விழியாதிருந்த விருத்தி
ரனைக்,கரந்துசிரம்பா ரிடைவீழக் கடிந்தான்குருதி கடலேற. ()

ஆயகாலேப்பிரமகத்தி யாகண்டலனைச் சுற்றிடலும்
பேயினுழன்று தான்புரக்கும் பெருநாடிழந்து பீதியனு
பேயுமுறக்கமாகார மின்றியுலகத் தெண்ணிலாத்
தூயதலங்க டோறுஞ்சென்று சுற்றித்திரிந்துந் தீர்விலதாய்.()

பொருப்பையிறகு தடிந்தவனோர் வருடம்பூவைவலஞ்செய்து
மருப்பமினுநீங்காமையினலடைந்தான்முன்செய்யருந்தவத்தா
ற்,றிருப்பவாநிகூடலெனும் திருமாநகர்வாய்ச் சங்கமமா
மருப்பொன்னதியிற்குடைந்திலந்தை மருந்தைப்பின்னுள்வழி
பட்டான். (கூ0)

வேதகிரியைத்தினந்தினம்போய்வலஞ்செய்திலந்தைவிமலன்றா
ன்,பாதம்பரசிநூறுமகம் வியாழப்புத்தேன் பணித்தருளா

லோதும்வண்ண மாங்கியற்றப் பிரமகத்தியொழிந்தியான்
போதற்கிடம்யாதெனக்கேட்பப்புகல்வான்புலவராருங்குரவன்

பூவிற்களராய்மின்னார்பாற் பூப்பாய்ப்புனலுட் பேணமாய்
மாவிற்றருக்களிடைப்பிசினாய்வைகென்றகற்றிப்பின்னருநான்
னாவிற்பகர்வான் கருப்பமுறு நங்கைமார்கண் பதிபததி
னவற்புதல்வற்பெறுமளவு மணைந்தாடவரை மருவிடுக. (௫௨)

தொட்டநிலத்துக் குழிதூர்ந்துமேவத்தொடர்ந்துகுடாரத்தால்
வெட்டுந்தருமந்தழைத்தோங்கிமென்மேல்வளர்கவெனவெவ
ர்க்கு,மிட்டமுறவிவ்வாறுபணித்திமையோர்தலைவனேகுஞ்செ
ன்று,சிட்டர்பரவும்வேதகிரி பணிந்துதெய்வபுரஞ்சேர்ந்தான

ஆதலாலிவ்வதரிவனத் தமலன்றனக்குத் தராதிகளின்
வேதவோங்கற் றிருமகிமை யிவ்வாறென்று விரைகமழும்
தாதார்தொடையிற் றிரத்துயம்மன் றனகருமிகாரதமுனிவ
ரேனதிறனென்றுயர்ந்தோர்க்குச்சூதமுனியீங் குணர்த்தினன்.

பத்தொன்பதாவது வேதகிரிமகிமைச் சருக்கமுற்றும்.

ஆகச்சருக்கம் ௧௯-க்கு விருத்தம். (௭௭௫.)

திருச்சிற்றம்பலம்.





சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

பதினாறுவது

# பிரமாவுக்குபதேசித்த

## சருக்கம்.

---

மாதவவேத வியாசன் வழுத்தும்
வேதகிரித்திரு மேன்மை யெடுத்தீண்
டோதினமோநிம லூர்தி தனக்குச
சோதிமெய் யுண்மை தொகுத்த துரைப்பாம். (௧)

உத்தமருக் குயர் சூதனுரைப்பான்
பத்திமையிற்பயில பான்மையர்கட்கு
முத்தியளித்த பவாநியின் முன்னாள்
மெய்த்திருவேதன் விழுப்பொருள் பெற்றான். (௨)

விரித்ததை யோதுதி வேதியவென்று
வுரைத்திடுவான்முன் னுயர்ந்தவி தாதாத்
திருத்திகழ்கின்ற திலோத்தமை யென்னு
மருத்திகண்மின்னை வருந்தி யுமைத்தான். (௩)

காவியிளம்பிறை கார்முக மொண்கண்
வாவுநுதற்புரு வம்பகர் பைம்பொன்
ஞேவியமன்ன வுருப்பொலி வாண்மேல்
மாவியனுன்முகன் மையலடைந்தான். (ச)

தன்றனிலானவண் மீதுதயாவின்
ஞென்றியபோக முனுற்ற நினைந்து
மன்றல்செய் போதன் மயங்கினனென்றால்
வென்றதை யாவர்விலக்கிடவல்லார். (ரு)

பங்கமில்கேண்மை பரும்புகழ் மேன்மை
யங்கனமான முதற்பலயாவுந்
தங்கியவெத்தகை மைத்தவர் கட்கு
மங்கையராசையின் மான்குறு மன்றே. (சா)

மட்டவிழ் பங்கயமன்னவன் மின்னைத்
தொட்டதிறலுள தெண்ணிலைபாறச,
சிட்டனமைத்த சிருட்டிகள் வேறு
பட்டனதன்மை யுணர்ந்து பயந்தான். (எ)

இத்தனைகுற்ற மிழைத்தது வேறு
ரொத்தனமாற்றினு மிற்றில வீசன்
பத்தியினீக்குதல் பண்பெனமாயோன்
புத்திரன்வானி புரத்தை யடைந்தான். (அ)

பூவனமாகிய புண்ணிய வைப்பிற்
பூவனமாவெனு மாண்பொருள்ன

பூவணமாமென வீழ்ந்து புகழ்ச்சம்
பூவணமாதன பூம்புனலாடி. (௯)

அருச்சனைவண்ண மிடற்றனை நூலா
றருச்சனைவண்ண மருச்சனை செய்தா
னஞ்சனவண்ணகை யாரலராலே
யஞ்சனவண்ண நிவேதனமாற்றி. (௧0)

வலங்கொண மனைவதி நன்னகர்மேலாம்
பலகைகளு மிட்டொளிர் பன்மணியேறுங்
கலனைசன்ன மிலைந்து கரங்கள் குவித்து
வலங்கொ டிரைறஞ்சி மகிழ்ந்துதுதிப்பான். (௧௧)

வேறு.

முப்புரமொருநகுசெய்தீ மூட்டிய நகையாய்போற்றித்
துப்புறழ்சடையாய் போற்றிச் சுடர்விடுஞ் சூலபோற்றிக்
கட்பிணர்வதரிமூலக கறைமிடற் றமலபோற்றித்
தற்பரபரமானந்தச சங்கமேச சுரனேபோற்றி. (௧௨)

அரியநான்மறையுமோரா றங்கமுமுணர்ந்த சைவப்
பெரியவரிதையக்கஞ்சப் பீடிகையினிது வைகும்
பரிபுரப்பாதபோற்றிப பராபரப்பொருளே போற்றிக்
கரியலர்புரமூன் றட்ட சங்கமேச்சுரனே போற்றி. (௧௩)

ஆதியேபோற்றிமுக்க ணரணவடிவ மின்னுள்
பாதியேபோற்றித்தெய்வப் பவாகிநாயகனே போற்றிச்
சோதியேபோற்றிவெற்றிச் சுடர்மழுப் படையாய்போற்றித்
தாதிவர்கொன்றைவேணிச் சங்காரபோற்றி யென்று. (௧௪)

மறைகளாலனந்தஞானி வழுத்தலும் வதரிமூலக
கறைமிடற்றமலன்கோடி கதிரென வுதித்துமுன்று
ளெறிகடலுண்டசெவ்வா யிருடியை யினியமுத்தி
யுறுதிநாரதனைநோக்கி யருள்செயவானுலகமுய்ய. (௧௫)

அரிதெனவிளங்குபஞ்சாக் கரத்தினை யலரின்வைகும்
விரிமறைக்கிழவன்பாங்கு மேன்மையா னுபதேசத்தைப்
புரிதிரென் றருளியெம்மான் போதனைப் பாரத்து நீபோயத
தெரிதவர்தமபாலுண்மை தெளிதியென் றருளிச்செயதான். ()

மடலவிழ்கடிப்பூஞ்சேக்கை வானவன் றனக்கிவ் வண்ணங்
கடல்விடமயின்றோன்கூறி மறைதலுங் கலைமினோமான்
விடையமற் றிருந்தோர்பாங்கர் விழுமியவெழுத்தஞ்சுண்மை
யுடலுரையுள்ளமொன்றி யுணர்ந்தன னெழுந்துசென்றான்.()

முன்னிலையின்றணிந்த முளரியான் முளரிநாபன்
றன்னிடைவந்துசெம்பொற் சகசநாளத்தி னுள்போ
யுன்னருமுகையைத்தேற லுகவுடைத தெழுந்துதோன்றிய
பொன்னலர்ப் பொகுட்டின்வைகிப் புன்னகன் படைத்தா
முன்போல். (௧௮)

விரிந்தமுக்குணத்தினின்ற முதற்குணவியற்கைத்தாகிட
பரிந்தருணிறைந்தவேத பாரகன் பலவேறாகி
யிருந்திடு மிருட்டிமாறா தியற்றலுங்குசலநுட்பந்
தெரிந்தில வுதற்கிந்தை தேரிலாசனெண்ணமிக்கான். (௧௯)

எல்லையில் சிருட்டியாதி யேனையகருமம் யாவு
மெல்லையிப்பல்கவேத நாயகியாகம் வைகுந்

இன்னவிரித்த மானதபூசை யியற்றினோரெய்திய பலம்யாம்
பன்னுதற்கெளி தன்னவனென்று பகருவான் கலிங்கதேசத்
தில், முன்னொருநாளி லிலிங்கியென்போனு முதுவிருடாசபிய
வனும், பொன்னவிர்கண்டி பூதிமேலாவல் பூண்டிலோர்
புனைதலைத்திருப்பார். (௫௰)

பிரதி யங்கா முழுஞ்செழுந் திருக்களத்தும் திகழ்தருவாகிநீண்ட
சாத்தியுங்கண்டி மேவலுமெசிறிய பரியனைகணிவொடும்வினை
த்து, விளைச்செழும்பூதி தரித்தவராகி வியப்பொடு முறைஞ
வா ரொருநாள், மருசசெறியர்தாவனத்திடையடைந்துவருவி
சேயாட்டேர்ந்தாலே. (௫௧)

புறவொடுபுறவு போகமுந் தீங்காற் பொம்மெனத்தொனித்த
சொற்கேளா, விறல்கெழுமிலிங்கி யாசியநேகிமென்னகை கோ
ட்டலுந் தன்னை, யறிவறயிகழுங்கா னென்றடற்கரத்தா லவ
ண்விருடாகபி யடிப்ப, வுறுசினவிலிங்கி யுடனடித்தொருவர்க்
கொருவர்கொன் றிறந்தனரூழால். (௫௨)

இறந்தவர்கண்டியணிந்நீறிட்ட வியல்பினாற் கலிங்கர்கோ
ன்மகன்பார், பிறந்தனனொருவ னறிவொடும்பார வதனை
னப்பெயரொடு மமைச்ச, னுறுந்திருமகனாய் வலிமுகனென
ப்பே ரொடுமினிதொருவன்வந் துதித்தான், புனைந்தொழுங்க
ண்டி பூதியின்சார்வாற் பூருவவுணர்வினரானார். (௫௩)

தெக்கணவளகை மகிமைபூருவத்திற் சிறப்பொடுங்கேட்டனர
தனாற், பொக்கமிலன்பா லிருவரும்பவாதி புரத்தினைய
டைந்து பொன்னிலங்கை, முக்கணையகனை நெடுநீனமிருந்து

முப்பொழுதினுந்தொழு திறைஞ்சிச், செக்கர்வான்சடையா
னருளினாற்சிவன் முத்தராய்ச் சிவபதஞ்சேர்ந்தார். (௫௪)

கண்டிகைநீறு பூருவஞானங் கைவசஞ் செய்ததுமுத்தி
கொண்டவார் மதில்சூழ் பவானிமாதலந்தானை கொடுத்த கே
ட்டியாலின்ன, முண்டொருகதைகேண் மன்னவவென்னா வுரை
செய்வா னவந்திதேசத்தி, லண்டொணாப்புலையர் குலத்தினிலு
தித்தோ னவன்பெயர் கொடியசங்கோசன். (௫௫)

தீயவெங்கொலைஞர் மரபினிலுதித்தோ னென்னினு மிரு
ளர்பவானி, நாயகன்மகிமை யாவர்கணவிற்ற வுணர்ந்தன ரோ
நனி யறியோருஞ், சேயலர்வதரி வனத்திடைவாழுஞ் சிவட்டுரு
சுடரையும் சேவித்த், தாயையும்பவானிச் சங்கமக்கரையுந் தலை
மருதுண் ணிலைந் திருப்பான். (௫௬)

பொருந்துமிங்கினைவே யாங்கவன் றனக்கு மானதபூசையா
ய்த்தினமு, மிருந்தாலொருநா ளிரவிடைவேந்த னெறிமம
னைபுகுந்துவெங் களவாண், டருந்தனமுதலாய பொருள்கவா
ந்தகல்வா னங்குள தூதர்கண்டவனை, வருந்துறப்பிணித்தகில
வாற்றினையரசன் மருங்குபோய வணங்கினருரைத்தார். ()

அடுத்தனருரைத்தல் கேட்டலும்வேந்த னகங்கொதித் திரவ
ஞங்கவனீண், டெடுத்தவையனைத்துங் கவர்ந்துமற்றவனை யிந்
நகரெயிற்புறங் கொடுபோய்ப், படுத்திரொன்றுரைப்பக் கொ
ண்டுபோய்வானாற் பதைத்திடவீசலுமிருகை, யெடுத்திருகண்
ணீர் சொரிந்திடப்பவானி யீசனேகாத்தியென் றிசைத்தான்.

தலமிட்டவனய ருரைத்தசொற் றழுவி யொருங்கிட விரங்குத
லகேட்ட, பாலருள்தாயார்பதறிவந்தென்னைப் பவாகிநாயகனு
ணர்ந்திதா ரிச், சாலவங்கவன்முன் னஞ்சலென்றிடவுந் தடிசி
டவோசுவெ வடிவாண், மாலையாயவன்றன் கழுத்திடைவீழ
வானவா-மலர்மழைபொழிந்தார். (௩௯)
எனச்சிரிதாய வடிபணிதிவனென் றிசைத்துவேதாம்பிகைபா
கா, தனக்குவந்தருநந் சங்கமவிலிங்கசயம்புநாயகன்மணி
விமான, மணக்கணிவமரர் கொடுவரப்பணிததம் மதங்கனை மா
சொவிதசேதறசி, சினகசுரியுரித்தோன் றிருவருள்புரியக கொ
ளெபோயடிவபுரஞ்சேர்த்தார். (௪௰)
ஆகலாறசிவனையருச்சனையன்பிறைற்றதலெவற்றினும்பெரிதா
மெதன்று ஐறுமானதபூசை யெவற்றினும் விழுமியதென்
ன, வேதமேயெடுதப விளமபிமாதனுல் விபூதிபஞ சாக்கர
மென்னு, மூதருமபொருளே பிறவியைமுறுக்கு மல்லதுவே
றிலை மொழியின். (௪௧)
இனையதொன்மகிமைத் தலமதாதலினு லெண்கணன் சிருட்டி
யீடேறப், புனையிழைபாகற் போற்றிநோற்றருளாற் புனிதப
ஞ்சாக்கரவுண்மை, யினிதுணர்ந்தனனென் றிந்திரத்துய்மனித
ம்பெறாரதனிசைத்த, னனிதகுகாதை யிதுவெனச்சூதன் சவு
னகன்மகிழ்ந்திட நவின்றான். (௪௨)

## பதினறுவது பிரமாவுக்கு உபதேசித்த சருக்கமுற்றும்.

ஆகச்சருக்கம் - பதினறுக்கு விருத்தம். (௲௧௭)

[illegible]



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# பதினேழாவது

# பிங்கலை மோட்சச் சருக்கம்.

---

சேட்டிளர்திங்கட் குழவிவீற்றிருக்குந் திருமுடிச்சிவபரஞ்சு
டர்பாத, பாட்டளிமுரலும் பங்கயப்புதுமீதே பாயமிபா ணை
ணர்ந்தவாறிதுமேற், பேட்டனமருளு மென்னடைத்தத்தையா
ய்ப பிறைநுதனறைமலர்க்கூந்தல், வாட்டடங்கருங்கட் பிங்க
லைமுதலி மன்னியமுறைமையைப் பகர்வாம். (க)

வியந்தினிதாற்றுந் தவத்தினோர்கேட்ப மீளவுஞ்சூதமாமுனிவ
னயந்தினிதிசைக்கும் வதரியம்பவாரி, நகரினோகார்கோணசரு
ஞ், சயந்தனையளிக்குஞ்சசிபுணர்தடந்தோட் சதமகனைகருமால்பி
ரமன், வயந்தருங்கரும் வழுத்திடுமென்றுனமற்றினியுரைகுமா
றெவனோ. (உ)

பூரதியமுத நதிதிரிபதாகை பன்மணிகொளித்திடும் பொன்னி
வாரலையமுனை மாநதிபவாநி வளநதிமூன்றுமென் மதலைத
தாரணிமுதற்குத் தென்றிரிவேணி சங்கமமாகியதகவாற்
சீரணியிமையோர் முனிவர்கள்யாருந் தென்பிரையாகையென்
றுரைப்பார். (௩)

தமாவத்தி, ரொருகதையின்னு மூரைக்குதுங்கேண்மி னெள
றெடுத்துவப்பொடும்பகர்வான். (அ)

சங்கலையெறிந்து தோணியைத்தகர்க்குந் தமரவாருதிப் பெருவீ
ப், பைங்கலையுடுத்த பார்மகண்முகமாம்பவானிமா பதியிடை
யுதித்த, வங்கலைநிரம்பும் வெண்ணிலாமதிய மனையசம்பூரண
வதனப், பிங்கலையென்னு மொருமகள்கணிகைப பேதையர
குலத்தினி லுதித்தாள். (௯)

பங்கயத்தவிசி னிருந்தநான்முகத்தோன் பார்த்தபோழ்செலாயு
வாரிச, செங்கையாற்றிரட்டி மாக்களைமயக்கத திருத்தியட்டி
வமோவன்றி, யைங்கணைக்கிழவன் சாங்களாற்றலைபட்டா
டவராவிசோர்ந்துருகத், தங்கிடகோல மோகினிகோலவோ
வெனப்பொலிசௌந்தரப்படிவாள். (௧௦)

மானினைமருட்டி வனத்திடையோட்டி வாளினையுறையினட
கிடத்திப், பாலலம்போதை நெய்தனுண்மலரைப் பயத்தி
டையிருத்தியம் புயத்தைத், தானணிமுறிந்து குழைகண்மே
ற்றுவிச் சஞ்சரீகங்களைத் தழைந்த, கானிடைத்துரத்திக் கடு
வழுதிருந்த கடலெனப்பொலிதடங்கண்ணாள். (௧௧)

வேறு.

[illegible]ரிதிரையுகன்றிரி வேணிசங்கம
புரிதனில்வதரியம் புனிதநீழல்வாழ்
[illegible]யமியிட சோதியாதத்தைக்
[illegible]மணமென் னறத்தகுந்தலான். (௧௨)

மதியினி லயர்த்துள மாக்கடம்பெருந்
திதியெனத் தேய்ந்திடுஞ் சிறுமருங்குலாள். (௪௮)

காந்தளஞ் செங்கையாள் கதலிக் கந்தெனப்
பூந்துகில்சூழ்தரும் பொற்குறங்கினு
ளேந்திளங் கொங்கையா ளினிய காமநூ
லாய்ந்தவை வரம்புகண் டறிந்தபண்பினள். (௪௯)

மாசறப்பாதநூ லனைத்துமாண்புற
வாசையிற் கற்றுநுண் ணறிவின்மேம்படும்
பாசிழை மடக்கொடி பவானிகூடலெம்
மீசனைமுப்பொழு தினுமிறைஞ்சுவாள். (௫௦)

காலையிற் காவிரி தோய்ந்து கண்டிகை
கோலவெண் ணீறணிந் திறைவன்கோயிலைச்
சாலநன்கினில்வலஞ் சார்ந்துசன்னிதிப்
பாலினின் றருநடம் பயின்றுபோற்றுவாள். (௫௧)

இன்புற விங்கெறி யொழுகிமெய்ப்பிரா
னன்பருக் கறனெறி யாற்றினீட்டிய
பொன்பொரு ளியாதெனும் போற்றியீந்திடு
மன்புளவகத்தினு ளழகின் மிக்குளாள். (௫௨)

சிந்தையின் புறத்தினந் தினமுநூறுபொன்
றந்தவர் தமக்கருந் தனங்கொடுத்துமேற்
செந்துவரிதழுறுந் தேறலூட்டிவேட்
டந்தமெல்லிரதிபோற் கலவியாற்றுவாள். (௫௩)

மன்னவராயினும் வழங்குநூறதாம்
பொன்னிலிலோர் பொன்னாறிற் பொருந்துகிற்றிலாள்
பின்னவரோனுபப் பெற்றியிர்கிடி
னன்னவளரம்பையி னணைந்துகூடுவாள். (உச)

மாலையுங் காலையும் வதரிபாயக
ஞாலயம் புகும்பொழு தலங்கண் மன்றலுஞ்
சேலையின் வாடையுந் தேசுங்கண்டுபூ
மேலுறும் வண்டென விடர்கள் சுற்றுவார். (உரு)

முன்புள தனக்கின முறையிற்கொண்டுபோ
யன்புட னளித்தளித் தற்றகாலையிற்
பின்பவட் கிந்தடப் பிசகின்னையாயா
லென்புரி லேபமென வேங்குவார்சிலர். (உசா)

பைந்தொடிக் களித்திடப் பணமின்றிய
மைந்தரெவ் வனமுமெவ் வறுமையுந்தெற
விந்தெனும் பிங்கலை யென்னுங்காமரு
சுந்தரி யுருவுனிச் சோர்கின்றார்சிலர். (உஎ)

சுத்திராற் றிசைதொறுஞ் சுழன்றுநொந்தன
பித்தமாங் கவட்கருள் பித்துளோர்சிலர்
நித்தலு நூறுபொன் னவட்குநேர்ந்திடப்
பத்தியாற் றெய்வதம் பரவுவார்சிலர். (உஅ)

அதிகமுங் குறைதலு மடைந்துளோர்தரு
நிதியமுங் கைக்கொள நினைகிலாளவள்

மதிதனிற் குறித்தடே வாங்கியாங்கவற்
பதியென முயங்கிய கற்பின்பான்மையாள். (௨௯)

வேறு.

இன்னநீர்மையி னொழுகிய விளங்கிளியன்ன
டன்னெறிற்குண முதலியவனைத்தனையுந் தான்கண்
டங்ககற்கனோர் வணிகர்சங காளையங்கவன்போ
துன்னருந்திறல் விரகினன் சூளைதனைனைபால. (௩௦)

கைத்துரம்பெரி திலஞ்சில கைபபொருள் சொண்டாங
கொத்ததன்குல வாணிபமுஞற்றுவோ னொருநாண
முத்தவாணைகைப் பிஙகலைமாலைவாய முகக
ணைததர்கோயிலுக கிரதிபோ லடைாதிடக் கண்டான. (௩௧)

முன்னையூழ்வினைத் தொடர்புற மூரிவிற்காமன்
கொல்லனெடுங்கணை துறததலும் பெருமயல்கூர்ந்து
தன்னிடத்துள தனிப்பொருள் தன்னிலீரமாந்து
பொன்னிலாவையர் லுளளனகொண்டுபின் போனன். (௩௨)

அதிதீசனன் வரக்காண்டலு நின்றவரிவைழகைக்
கொடுத்தனன்குறை நிரப்பிநங் கோலமெல்லமழி
த்துவாவென வியம்பினளேகின னிரவி
பத்திச்செங்கரஞ் சுருக்கிமேற்றிசைக்கடன் மறைந்தான். (௩௩)

வருஞ்சூழ்ற்றி மனத்தினன் மனையிடைப் போகா
[illegible] குறையுமே லணக்கவேள்பகழி

தூமவார்குழற் றேலகமேற் சுரந்திடுமோகக்
காமநோய்தலைக் கேறலுங் கடக்கலன்றி
வாமமேகலை மறைக்கொடி பங்கில்வீற் றிருந்த
சோமசேகரன் சன்னிதிவாய்தலிற் றுககான். (௪0)

காரிலங்கிய கண்டனைப் பணிந்திரு கண்கள்
தாரைகால் றிடச் சாற்றுவான் றமியனேனிறந்தாற்
பேரமேல்வரும் பிறப்பினுக்காயினு மவனேன்
பாரிபாய்வரப் பரிந்தருள் வரமெனப்பணிந்தான். (௪௧)

அங்கணையகற் பணிந்துபோ யவிர்திரிவேணி
சங்கமந்தனை யம்முறைவேண்டினன் றாழ்ந்து
செங்கைகூப்பியின் றன்னவட் சேருபாதரவால்
வெங்கணுன்விரைந் திறங்கினன் வீழ்ந்துயிர்விடுத்தான். (௪௨)

இன்னவாகியங் கவன்செய்த சீர்மையை யெழின்மின்
னன்னெறிடை யணங்கனள் கேட்டறிந் தந்தோ
வென்னிமித்தமா யெற்புணர்காதலா றொழிந்தீர்ப்
பொன்னியிற்புகுந் திறந்ததென் பொருட்டினுலன்றே. (௪௩)

எடுத்தயாக்கையைத் தன்னுடமியைவதற் கெண்ணி
விடுத்ததன்மையான் றுணிவையு மன்பையும் வியந்து
மடுத்தநெஞ்சினள் மறைக்கொடி பாகம்வீற் றிருந்த
[illegible]டுத்ததும்பிய கண்டனை நினைந்தகங் கனிந்தாள். (௪௪)

அடுத்[illegible]க்குமெய் யந்தணர்தமக்குமெய் யன்பாற்
[illegible]ட்டிய தனமெலாஞ் சிறப்புறநல்கி

மிடைந்தகாதலான் வன்னமயிருவினைய விடுத்தோ
ரடைந்தபேறிதுவ யாதாலாலந்நதி கரையூர
தடந்தழீஇமதிற் றலத்திருபகிலமையுந் தகவாற்
படர்ந்த வார்சடைப் பகவனேபகாதிடப் படுமால். (௫௧)

கடிகமழ்ந்திடு தெக்கணவளகயே கடல்சூழ்
படியினிற்சிவ புரமலாலவேறிலைப் பகரின
மடிமைகூர்பிர மகத்திகோ வதமுதற் பொல்லாக
கொடியபாவமு மங்ஙகர் குளைதிடுமென்றே. (௫௨)

ஆயதன்மைசால் மகிமையிற்பொலிந்தவா கொவாய்க
காயும்வென்றிவேற் கலிங்கதேசாதிப னொருவன்
றூயனும்பெயர் சுதாமனென் றுள்ளவன் சுதரு
மேயதிண்டிறல் விசுவதாமன்புகழ் மிககோன். (௫௩)

ஆங்கவன்றனி நகரிடையரசுசெய் நாளிற்
றீங்கில்வேட்டகஞ் செடகுவாய் றென்றிசைபோசுந்த
தேங்குநாண்மலர்ப் புறவமுரிதுடைமெழு மருவி
தூங்குகுன்றமுந் தினந்தொறுந் தருவிடந்தனுவே. (௫௪)

கனத்ததானையான் கவனவாம்பரியிசைக்கடுகி
யினத்துளோரொடுஞ் சிலதினஞ்சுரங்கணீ ததிண்டிச
னத்தைவென்றவரோர் சேர்தருதெக்கண வதரி
வனத்தையுற்றன னங்கடர் சூழலுள்வருவான். (௫௫)

தென்றலைவாய்ங்கொரு கோவினைமலரயென நினைந்து
...வெஞ்சிலை குழைத்தொரு சுடுகணை துறந்து

கொன்றவன் விரைந் தேகினன் பார்த்தனன் கொதித்தா
னன்றுசெய் தன னென்றுளமடுங்கினன் சோர்ந்தான். (௫௬)

வெந்துயர்க்கடல் விழுந்தனன் கண்கணீர்விடுத்து
நொந்துலப்பிலா னோயுளமதென் செய்கே னென்னச்
சிந்தைநைந்துளோ னன்னே திர்ககண்ணுவன் சிவன்போல்
வந்துதோன்றினன் காண்டலுமலரடி வீழ்ந்தான். (௫௭)

சிட்டனுக்கவ ணிகழ்ந்ததைச் செபினனடியேன்
கெட்டொழிந்திடா துய்நெறிகிளர்தருதி யென்ன
மட்டலர்ந்ததார் மன்னவனிரங்கலு மறையோ
னெட்டயாவொடு முய்யுமாறொருமொழி பகர்வான். (௫௮)

வேறு.

மாயப்பிறவிக் கொருமருந்தாம் வதரிவனத்துச் சிவவடிவாய
காயத்திரிமா நதிமூழ்கிக் கருதுங்காயத் திரிசிலைக்க
ணேயத்தொடுமாங் கிருந்தைந்து கமலவெழுதகையாயிரம்பத்
தாயதாகவுருவேற்றில[illegible] யறுமென்றான். (௫௯)

அவ்வாறுணர்த்து மருந்தவனை வணங்கியரச னருணெறியாஞ்
செவ்வாறதனைக் கடைப்பிடித்துத் திறம்பாதாற்றித்தீதகற்றி
வெவ்வாயுலையி லுருகியசெம் பொன்போல்விளங்கி மெய்யன்
பான், மைவாள்கண்டன் சினகரத்தின் மல்கும்பணிகள் பல
செய்தான். (௬௦)

சின்னாளங்குவதிந்து சிவ விலிங்கப்பதிட்டை செய்துமறை
யின்னுயகற்குத்திருவிழா வியப்பாநடத்தி விடைகொண்டு

தன்னுடைந்துமேலாய தருமமியற்றித தகைசான்ற [சே
பொன்னுயகன்போற் றரியசிவ புரத்தை யடைந்தானபுரவல

ஆதலாலிப்பவானிபுரி யருமையெம்ம ஞேர்களெடுத
தோதற்கெளிதன் றுயர்தவத்தி னுண்மையடைந்தீரினிடகள,
நீதிலாதநாரதனிக் திரத்துய்மனுக்குத் தெருட்டினதென்
றேதமகன்றோர் களிசிறப்பச் சூதமுனிவனிசைத்திட்டான். (

# பதினேழாவது பிங்கலை மோட்சச்

## சருக்கமுற்றியது.

ஆகச்சருக்கம் பதினேழுக்கு விருத்தம். (அஎக

திருச்சிற்றம்பலம்.



கருத்துவந் தெழுந்துதென் றிசையிற்கண் ணுறு
திருத்தகு தலம்பல தெரிசித்தெய்தினார். (௪

மயில்பயி னறுமலர் வனமும்வான்றொடு
புயல்படி சயிலமும் புனிததீர்த்தமு
மியல்புடன் கடந்துநீத் தெய்தித்தெக்கண
கயிலையாம் வதரியங் கானநண்ணினார். (௫)

நாடினர் சங்கம நதியைநண்ணியங்
காடினர் நீறணிந் தங்கையுச்சியிற்
சூடினர் சாமகற் சுருதியன்பினாற்
பாடினர் கோபுரம் பணிந்துபுக்கினார். (௬)

வேதனாடகியொரு பாகமேவிய
வாதியை வதரிவா யனாதியாயுறுஞ்
சோதியையாகமச் சுருதிநான்முறை
தீதறப்பூசனை திருத்தினாரரோ. (௭)

பண்கொளுஞ் சுருதியாற் பரவியானந்தக்
கண்கணீ ருகுத்தனர் கருணையங்கய
லொண்கணாள் பாகனை யுலகளந்துளோ
னெண்கணான் காண்பரு மிறையைவாழ்த்தினார். (௮)

பிங்கலன் பூசனை பெரிதுவந்தினி
தங்கவன் பேர்புனை யமலபோற்றிமெய்
தங்கியபராசரன் றவமுவந்தருள்
சங்கமகேத்திரத் தலைவபோற்றியே. (௯)

கண்டருந் தொழுவுறை யமலபோற்றிமென்
றண்டளிர் வதரிவாழ் தலைவபோற்றியே. (௧௫)

மாதவத்தொருப்படு வியாசன்வந்தருட்
போதநான்மறைகளை வகுத்துப்பூவிடைச்
சாதகர்க்களித்திடத் தயங்கிவைகிய
வேதவெற்புறைதரு விமலபோற்றியே. (௧௬)

பாட்டளி துனதர்திசை பாடுஞ்செவ் விதட்
டோட்டல ரம்புயத் தோன்றற் குய்நெறி
காட்டியவஞ்செழுத் துண்மைகாதிடை
நாட்டியதிருவரு ணம்பபோற்றியே. (௧௭)

கொங்கலர் கருங்குழற் குமுதச்செய்யவாய்த்
திங்கள்வெண்பிறைநுதற் சிறியநுண்ணிடைப்
பிங்கலைக் கருள்புரி பெருமபோற்றிசீர்
ஓங்கிய மறைக்கொடி தலைவபோற்றியே. (௧௮)

ஈசநின் றிருவடி போற்றியெம்மனோர்
பூசைகொண்டருளிய புனிதபோற்றிமுன்
மாசகல் சூதனின் மகிமைநங்களுக்
கேசறச் சொலத்தரு மிறைவபோற்றியே. (௧௯)

இம்முறை யிறைவனை யிரங்குமன்பினல்
லம்மலங் கழுவிய முனிவர் போற்றலு
மம்மலர்க் கந்தர வதரிநாயகன்
ம்மர்தீர் பேரருள் வழங்கினனரோ. (௨௦)

இறையருள் பெற்றன ரின்புழுற்றனர்
மறையுமை கோன்விடை வழங்கவுண்மைநூ
லறைதரு சவுனகராதி மாதவர்
நறுமலர் நைமிசாரணிய நண்ணினார். (௨௧)

வேறு.

வாழியந்தணர் வானவரானிரை
வாழிவையக மாதவரன்பர்கள்
வாழ்கென்னை கேசன் மலர்க்கழல்
வாழிபூரணை வல்லிபொற் றுள்களே. (௨௨)

# பதினெட்டாவது சிவார்ச்சனைச்

## சருக்கமுற்றும்.

ஆகசருக்கம் ௧அ-க்கு விருத்தம் (௯௦௧)

## பவிஷ்யோத்தரபுராணம்

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.